KALKI
4.5.2006 ரூ.8.00
80 பக்கங்கள்

# கல்கி

குடும்பத்துடன் களிக்க...

தேர்தல் ஸ்பெஷல்





சர்ச்சையால் சரிவா?

# 'அம்மா' அனுப்பிய நோட்டீஸ்!

* ஆல் இந்தியா ரேடியோவுக்கு அம்மா நோட்டீஸ் விட்டிருக்கிறார். விவகாரம் இதுதான்... மைலாப்பூரில் உள்ள ஏ.ஐ.ஆரின் இடம் தமிழக அரசுக்குச் சொந்த மானது. இப்போது ஏ.ஐ.ஆர்., பிரசார் பாரதி என்ற நிறுவனமாக மாறிவிட்டதால் நிலத்தை எங்களிடம் ஒப்படைக்கவும் என்று தமிழக அரசு கேட்டிருக் கிறதாம். அப்படி முடியவில்லை என்றால் ஏ.ஐ.ஆருக் குச் சொந்தமாக எண்ணூரில் இருக்கும் நிலத்தைக் கேட்கிறார்களாம்.



* திருமாவளவன் வருத்தத்தில் இருக் கிறார். 'இரட்டை இலைச் சின்னத்தில் நிற்கவும்' என்ற அம் மாவின் உத்தரவை அவர் கண்டுகொள் ளாததுதான் விஷயம். 'கட்சி, தேர்தல் கமிஷன் அங்கீகாரத் தைப் பெறுவதற் காகத்தான் நாங்கள் தனிச் சின்னத்தில் போட்டியிடுகிறோம்' என்கிறார் வளவன். அம்மா கொஞ்சம் கோபித்துக் கொண்டதன் காரணமாக உறுதியளிக்கப்பட்ட நிதியுதவி தாமத மாகிக் கொண்டே வருவதும் அவரது வருத்தத்துக்குக் கூடுதல் காரணம்.

* தமிழகம் முழுவதும் சூறாவளியாக சுற்றுப் பயணத்தில் ஈடுபட்டு, அம்மாவுக்கு ஆதரவாகப் பிரசாரம் செய்யும் சரத்குமாருக்கு தூத்துக்குடி மீது மட்டும் தனி கண். அங்கு போட்டியிடும் தி.மு.க. மாவட்டச் செயலாளர் மகன் கீதாஜீவனை தோற் கடித்தே தீர வேண்டும் என்பதே அவர் நோக்கம். எல்லாம் பழைய பகைதான்.

* தி.மு.க வேட்பாளர்கள் மிகவும் குஷியாக இருக்கிறார்கள். காரணம் இந்தத் தேர்தலைப் பொறுத்த மட்டில் அறிவாலய கஜானா தாராள மாகவே திறந்து விடப்பட்டிருப்பதுதான்.

* 'அராஜக அ.தி.மு.க. ஆட்சி அகற்றப்படும் வரை நான் கறுப்புச் சட்டையைப் போடுவேன்' என்று சூளுரைத்த ம.தி.மு.க. எழும்பூர் தொகுதி வேட்பாளர் சத்யா, இப்போது வெள்ளைச் சட்டையுடன் வலம் வருகிறார். இதை மேடை தோறும் சொல்லி, கிண்ட லடிக்கிறது தி.மு.க. அணி.

* தி.மு.கவில் கவிஞர் சல்மா போட்டியிடுவது போல, விஜயகாந்த் கட்சி யிலும் ஒரு கவிஞர் போட்டி யிடுகிறார். அவர் திருமயம் அழகுராஜ். சிவகங்கை மாவட்டம் திருப்பத்தூரில் போட்டியிடும் அவரை தே.மு.தி.கவினர் 'நம்ம கட்சி காளிமுத்து' என்கிறார்கள். மேடையில் அழகு தமிழில், அடுக்கு மொழியில் அழகு ராஜ் வெளுத்து வாங்குவது தான் காரணமாம்.

- சஞ்சயன்



• வருத்த வளவன்!

• தூத்துக்குடி கண்!



நர்மதா அணை விவகாரத்தில் முழுமூச்சாகத் திட்டம் நிறைவேற வேண்டும். இடைத்தரகர்கள், அரசியல்வாதிகள் குறுக்கிட்டு பாமர மக்கள் பயன் பெறுவதைத் தடுக்க அரசு நடவடிக்கை எடுக்க வேண்டும் என்பதை தலையங்கம் தெளிவுபட உணர்த்தியிருந்தது.
**கோவி. இரவிச்சந்திரன்,**
**காராமணிக்குப்பம்**

ரேவதி சங்கரனின் குழந்தைகள் பற்றிய பயிற்சி அருமையான ஒன்று. ஒவ்வொரு பெற்றோரும் அவசியம் தெரிந்துகொள்ள வேண்டிய அற்புதமான விஷயம்.
**சென்னை - 17, ஆர். ரங்கநாதன்**

சிக்கலில் செல்வியா? என்ன இருந்தாலும் ராதிகாவின் தொடர்களை சன் டி.வி.யில் பார்ப்பதைத்தான் ரசிகர்கள் விரும்புவார்கள்!
**ஆதம்பாக்கம், வே. முருகேசன்**

வாரிசு அரசியல் பற்றிய கேள்விக்கு கனிமொழி அளித்த பதில், 'நான் யார் தெரியுமா, கலைஞரின் மகளாக்கும்' என்றது.
**சென்னை - 92, குவளை எழில்**

'துப்பறியும் புலி' கட்டுரை பெண்ணின் பெருமையையும் கடமையையும் உணர்த்தி, சிந்திக்க வைத்தது.
**திருச்செங்கோடு, எஸ்.உஷா சுதர்சன்**

# கொக்கரக்கோ கும்மாங்கோ!

'சிரிப்பாய்ச் சிரிக்கும் அரசியல்' என்ற தலைப்புக்கு வடிவேலுவின் ராஜா வேஷ அட்டைப் படம் வெகு பொருத்தமாய், சிறப்பாய் இருந்துச்சய்யா... இருந்துச்சு!
**அயன்புரம்,**
**த.சத்தியநாராயணன்**

வடிவேலுவின் பேட்டி, படங்களைப் பார்த்ததுமே குபீரென சிரிப்பு பொத்துக்கொண்டு வந்துவிட்டது. படம் பற்றிய ஆவல் அதிகமாகிவிட்டது.
**மங்களபுரம், சுமிதா**



முதல் பக்கத்தில் திருப்பதி பட விமர்சனத்தையும், கடைசிப் பக்கத்தில் திருட்டுப் பயலே பட விமர்சனத்தையும் வாசகர்களுக்காக வெளியிட்டு அசத்திவிட்டீர்கள்.
**சென்னை - 82, சி.பரத்**

'இலவச ஏ.சி.' சிறுகதை வெடிச் சிரிப்பை வரவழைத்தது! ஏமாறுகிற அப்பாவி ஜனங்கள் இருக்கிறவரை, ஏமாற்றுகிற

✉ நான்கு வாரமாக 'அழகி' எங்களை 'உச்' கொட்ட வைத்துவிட்டாள். தொடர் முடிந்ததும் என் நினைவுக்கு வந்த பொன் மொழி...
'எதையும் தள்ளிப் போடாதீர்கள்;
தாமதத்தின் விளைவுகள் சாதகமாய் இருப்பதில்லை'
கடலூர், இரா. முனீஸ்வர சர்மா



# ஸ்வீட் போஸ்ட்!

ம.ம.கு. போன்ற கட்சிகள் இருக்கத்தான் செய்யும்!
**திருச்சிராப்பள்ளி, அ. கலைஹல்ரஹ்மான்,**

✉ ஜுஜுபி தண்டனை, வண்ணக் கனவுகள், இரட்டைச் சோகம், சேரும் மதியீனம் என கிறங் கடித்து விட்டீர் தராசாரே. போட மறந்த பிளாஸ்திரி சிந்திக்கவும் வைத்தது.
**திருவொற்றியூர், தர்மன் பெரியசாமி**

✉ தமிழக அ'ரி'சியல் கார்ட்டூன், 'ஐயோ பாவம் அரசியல்வாதிகள்!' என அனுதாபப்பட வைத்தது.
**மடிப்பாக்கம், கே.என்.பாலகிருஷ்ணன்**

✉ இலவச அறிவிப்புகள் இல்லாமல், காரசாரமாக நகைச்சுவை ததும்ப களைகட்டியிருந்தது தேர்தல் ஸ்பெஷல்-1. கொக்கரக்கோ கும்மாங்கோ!
**ஈரோடு -1, ரேவதிப்ரியன்**

✉ ஆயுள் இன்ஷூரன்ஸ் என்றாலே காததூரம் ஓடுபவன் நான். இதுவரை எந்த பாலிசியும் எடுக்காதவன். அமரர் 'கல்கி' போல நானும் பகவானிடம் நம்பிக்கை உள்ளவன் என்று சொல்லிக்கொள்வதில் பெருமிதம் அடைகிறேன்.
**புனலூர், பி.எல். பரமசிவம்**

✉ 'பொறுமை எருமையிலும் பெருகும்மா' என்ற நடிகை மதுவின் ஜாலி தத்துவம் அருமை.
**சேலையூர், கே.வி. ராமன்**

✉ விஜய டி.ஆரின் பேட்டி கலக்கல். தன்னுடைய கொள்கையில் தெள்ளத் தெளிவாக உள்ளார் என்பதைப் புரிந்துகொள்ள உதவியது.
**ஹோசூர், சி.ராஜகோபால்,**




# கல்கி

ஒவ்வொரு இதழும் உங்கள் பேழைக்கு

**பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்**
அச்சிட்டு வெளியிடுபவர் :
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

ஆசிரியர் குழு :
**ஆர்.சி. ஜெயந்தன்**
**மு.மாறன்**

வடிவமைப்பு :
**எஸ். ஸ்டீஃபன்**
**பி.ஆர். ராஜன்**
**ச. கார்த்திகேயன்**

தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.440/-
ஆறு மாதம் : ரூ.220/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ். டாலர்

**Bharathan Publications
Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

ஹாட்ரிக் அடித்திருக்கிறார் இயக்குநர் பேரரசு. ஏவி.எம் - அஜீத் - பேரரசு கூட்டணிக்குத்தான் புத்தாண்டு ரிலீஸ் தேர்தலில் முதலிடம். திருப்பதியில் அஜீத்துக்கு இணையாக பேரரசு நடிக்க முயற்சித்து ஃபைட் எல்லாம் செய்ததில் அஜீத் ரசிகர்கள் கொதித்துப் போயிருப்பதாகச் செய்திகள் கசிய, வெற்றிக் களிப்பில் இருந்த பேரரசுவைச் சந்தித்து உண்மையைக் கேட்டறிந்தோம்.



• பேரரசு

# அஜீத்துடன் மோதலா?

**தி**ருப்தி தந்திருக்கிறதா திருப்பதி...?

"பெண் ரசிகர்கள்தான் எப்போதும் என் டார்கெட். பெண்களோடு கூடவே குழந்தைகளும் கணவரும் துணைக்கு வருவார்கள். வசூல் மழை பொழியும். இந்தக் கணிப்பின்படி, என்னுடைய முந்தைய சூப்பர் ஹிட்களான 'திருப்பாச்சி', 'சிவகாசி' படங்களைவிடவும் 'திருப்பதி' சூப்பர் ஹிட்டாகியிருக்கிறது. 'மழையால் ஒருமாதம் ஷூட்டிங் பாழானது. எப்படி சொன்ன தேதியில் முடிப்பீர்களோ என்று பயந்தோம். ஆனால் சரியான தேதியில் முடித்து வெற்றிப் படமாகவும் ஆக்கி விட்டீர்கள்' என்று என் கையைப் பிடித்து பாராட்டு தெரிவித்தார் ஏவி.எம். சரவணன். தேர்தல் முடிந்ததும் வசூல் மேலும் எகிறப் போகிறது பாருங்கள்."

**ஹீரோவைப் போல சண்டை போட்டு பஞ்ச் டயலாக் எல்லாம் பேசியது அஜீத்துடன் உங்களுக்கு மோதலை உருவாக்கி விட்டதாமே?**

"வாய்ப்பே இல்லை. அவை வெறும் புரளிச் செய்திகள். சினிமாதான் எனக்கு இத்தனை ஆண்டுகளாக சோறு போட்டுள்ளது. அதைத் திருட்டு வி.சி.டி பெருச்சாளிகள் பாழாக்குவதை என் சார்பாகக் கண்டிக்கும் விதத்தில்தான் அப்படியொரு காட்சியை அமைத்தேன். திருட்டு வி.சி.டிக்கு எதிராக ஆட்டோ ஓட்டுநர் வேடத்திலுள்ள நான், வெறும் வசனம் மட்டும் பேசினால் போதாது. பதிலாகக்



குண்டர்களை நொறுக்கியெடுப்பதாகக் காட்சி வைத்தால்தான் சொல்ல வந்த கருத்து முழுவதுமாக எடுபடும். படம் வெளிவந்த நாள் முதல் நானும் தியேட்டருக்குச் சென்று ரசிகர்களின் நாடித் துடிப்பை அறிகிறேன். நான் சண்டையிடும் காட்சியில் அஜீத் ரசிகர்கள் ஆர்ப்பரிப்பதை நேரில் வந்து பாருங்கள். விசில் சத்தம் காதைப் பிளக்கிறது. காகிதங்களை யெல்லாம் வீசி யெறிந்து... அப்பப்பா... நான் வரும் காட்சிகளில் தியேட்டரே அல்லோலகல்லோலப்படுகிறது. அஜீத்கூட என் ஆக்‌ஷனை மிகவும் ரசித்து 'அட, கலக்குறீங்களே' என்றார். ஆக, யாரும் யாராலும் காயப் படவில்லை..."

**ஒளிக்காமல் சொல்லுங்கள்... உங்களுக்கு ஹீரோ ஆசை உள்ளதுதானே?**

"எப்போது கதை பண்ண உட்கார்ந்தாலும் முதலில் நான்தான் ஹீரோ என்று நினைத்துக் கொள்வேன். ஆகவே இயக்குநருக்கு அடுத்த பரிமாணமாக நான் ஹீரோவாகலாம். அதற்கு சாத்தியமுண்டு. என் நலம் விரும்பிகளின் விருப்பமும் அதுவே. ஆனால் ஆக்‌ஷன் ஹீரோவாவதைவிட யதார்த்தமான ஹீரோவாக விரும்புகிறேன். பார்ப்போம்."

**உங்கள் கதை, திரைக்கதையில் உங்களுடைய சகோதரர் முத்து வடுகு இயக்கத்தில் விஜய் நடிப்பதாக இருந்த 'முரசு' கைவிடப்பட்டது ஏன்?**

"விஜய்க்கு அவசரமாக ஒரு படம் பண்ணியாக வேண்டும். ஆனால் 'திருப்பதி' முடித்துத்தான் என்னால் 'முரசு' ஸ்க்ரிப்டில் இறங்க முடியும் என்கிற நிலை. எனவே விஜய், தரணி இயக்கிய தெலுங்குப் படமான 'பங்காரம்' ரீமேக்கில் நடிக்கக் கிளம்பி விட்டார். அது முடித்ததும் விஜய் என் இயக்கத்தில்தான் நடிக்கிறார். அதற்கடுத்து விக்ரமுடன்."

**விஜய், அஜீத், விக்ரம் என்று பிர**

**பலங்களுடனே சவாரி செய்வது ஏன்?**

"கமர்ஷியல் டைரக்டர் ஆகிவிட்டதால் இதையெல்லாம் தவிர்க்க முடியாது. இதைச் சரிக்கட்ட நகைச்சுவை மற்றும் துணை கதாபாத்திரங்களுக்கு சிறிய நடிகர்கள், புதுமுகங்களையே பயன்படுத்துகிறேன். என் இசையமைப்பாளர்கள்கூட சாதாரண, வளரும் கலைஞர்கள்தான். அனைவரின் விருப்பத்துக்கிணங்க பாடல்களையும் நானே எழுதிக் கொள்கிறேன்."



**உங்களுடைய மசாலா படங்கள் தமிழ் சினிமாவின் சாபக்கேடு என்று வீசப்படும் விமர்சனங்கள் பற்றி?**

"இயலாமையில் அவ்வாறு பேசுகிறார்கள். ஒரு கமர்ஷியல் படத்துக்குண்டான சகல அம்சங்களையும் கலந்துகட்டி கொடுக்கும் வித்தையை நான் கற்றுள்ளேன். என்னுடைய படங்களில் புழுதி பறக்கும் காட்சிகளுக்கிடையேயும் யதார்த்தமான காட்சிகளைத் தவறாமல் வைக்கிறேன். அதனால்தான் பெண்கள் கூட்டத்தையும் என்னால் திரையரங்குக்கு இழுக்க முடிகிறது. யதார்த்தமாகப் படம் செய்வது ஒன்றும் கம்பசூத்திரம் கிடையாது. என்னாலும் சுலபமாகச் செய்ய முடியும். ஆனால் யதார்த்தமான படங்களைக் கொடுக்கும் இயக்குநர்களால் மசாலா படங்களை இயக்கி ஹிட்டாக்க முடியுமா? முப்பது ரூபாய் கொடுத்து டிக்கெட் வாங்கும் ரசிகனுக்கு மட்டுமே நான் பதிலளிக்கக் கடமைப்பட்டவன்."

**உங்களுடைய பெயரை டைட்டில் கார்டில் போடும்போது சிறுபிள்ளைத்தனமாக கரெக்டாக திரையில் உதிக்கிறீர்களே?**

"ஆளானப்பட்ட பாரதிராஜாவே டைட்டில் கார்டு போடும்போது 'என் இனிய தமிழ் மக்களே' என்று இருகரம் குவித்து தம்மை அறிமுகப்படுத்திக் கொள்கிறார். கூடவே போஸ்டரிலும் தன் படத்தை அச்சிட்டுக் கொள்கிறார். இந்நிலையில் நான் செய்தால் மட்டும் என்ன குற்றம்? 'மக்களே, நீங்கள் பார்த்துக் கொண்டிருக்கும் படத்தை இயக்கியது நான்தான்' என்று என்னை அடையாளப்படுத்திக் கொள்ளவே இந்த ஏற்பாடு. இனிவரும் படங்களிலும் இதுபோன்ற யுக்தி தொடரும்."

**உங்களுடைய தொடர் வெற்றிகளை வீட்டில் எவ்வாறு எடுத்துக் கொள்கிறார்கள்?**

"சிறு வயதில் சரியாகப் படிக்காத, வீட்டுக்கு அடங்காத பிள்ளையாய் காலத்தைக் கழித்தவன் நான். இதனால் ஒரு சமயத்தில் இவன் உருப்படப் போவதில்லை என்று வீட்டில் முடிவு செய்து விட்டார்கள். இதனால் இப்போது என்னுடைய படங்களைப் பார்க்கும் அப்பாவுக்கு 'என் மகனா இப்படங்களை இயக்குகிறான்' என்று இன்னமும் சந்தேகம்! சென்னையில் மிகச்சாதாரண வாழ்க்கைதான் வாழ்ந்து வருகிறேன். என்னுடைய வாடகை வீட்டில் ஏ.சி.கூட இருக்காது. அன்னமெல்லாம் கையேந்தி பவனில்தான். கடந்த இரண்டு வருடங்களாக தினமும் சராசரியாக மூன்று மணி நேரங்களே தூங்குகிறேன். இதெல்லாம் பார்த்துவிட்டு என் மனைவி விரைவில் சென்னை வந்துவிடுவதாகக் கூறிவிட்டார்."

**- ச.ந.கண்ணன்**



# சர்ச்சையால் சரிவா?

2006 சட்டமன்ற தேர்தலின் இறுதிக் கட்டத்தில் இருக்கிறோம். தொடர்ந்து தொகுதி ரவுண்டப் செய்து வந்ததுபோக, இந்த இதழில் தமிழகத்தை ஐந்து மண்டலங்களாகப் பிரித்து, ஒவ்வொரு மண்டலத்திலும் முக்கிய தொகுதிகளின் சாதக, பாதகங்களை அலசி, ஜெயிக்க வாய்ப்பிருக்கும் அணி எது, இழுபறி நிலை நீடிக்கிறதா என்பது குறித்தெல்லாம் கணித்துள்ளோம். முதலில் சென்னை மண்டலம்... தொகுதிகளின் வேட்பாளர்கள், பிரசாரத்தை வாசலில் வந்து வேடிக்கை பார்க்கும் பெண்கள், தொகுதியின் உழைக்கும் வர்க்கத்தினர், முதியவர்கள் என பல தரப்பினருடனும் பேசினோம்.

**புத்தம் புதுப் பயணம்!**

சைதாப்பேட்டையில் தி.மு.க. கூட்டணியின் சார்பாக பா.ம.க.வின் சி.ஆர். பாஸ்கரனும், அ.தி.மு.க. சார்பாக செந்தமிழனும் நிற்கின்றனர். தி.மு.க.வின் கோட்டை பா.ம.கவுக்கு வழங்கப்பட்டது உடன்பிறப்புகளுக்கு இலேசான அதிருப்தியை ஏற்படுத்தியிருந்தாலும் தலைமைக்குக் கட்டுப்பட்டு முழு மூச்சுடன் தேர்தல் வேலை செய்து வருகின்றனர். பாஸ்கரன் வெளியூர்க்காரர் என்பதை முன் வைத்து களத்தைச் சூடாக்கி வருகிறார் செந்தமிழன். முதல்வர் மீண்டும் ஒருமுறை இங்கு பிரசாரம் செய்தால் வெற்றி சுலபமாகிவிடும் என்கிறது அ.தி.மு.க. வட்டாரம். ஆனால் கலைஞர் வராமலேயே வெற்றிக்கனியை அவரிடம் கொண்டு சேர்ப்போம் என்கிறது தி.மு.க. வட்டாரம். களத்தில் இருக்கும் இவர்கள் இருவருமே முன்பு சட்டமன்ற உறுப்பினர்களாக இருந்தவர்கள் அல்ல. புத்தம் புதுப் பயணம் மேற்கொண்டுள்ள இவர்கள் இருவர் மீதும் எவ்வித அதிருப்தியும் இல்லை. ஆனால் தொகுதிக்குள் மத்திய அமைச்சர் தயாநிதி மீது ஏகப்பட்ட அதிருப்தியில் உள்ளனர் மக்கள். "ரொம்ப சுறுசுறுப்பான அமைச்சரா இருக்காரேன்னு நாங்க ரொம்ப பெருமையா இருந்தோம். டாட்டாவையே மிரட்டி, தன்னோட துறையை இப்படி மிஸ் யூஸ் பண்ணுவார்னு நாங்க எதிர்பார்க்கல. அநேகமா இவரால தி.மு.க.வோட இமேஜ் டேமேஜ் ஆகும்னு நினைக்கிறேன்" என்றார் நாம் சந்தித்த சஜீத். பிரசார முறை, எடுத்து வைக்கும் பிரச்னைகள், அளிக்கும் வாக்குறுதிகள் ஆகியவற்றை வைத்துப் பார்த்தால் வெற்றி இழுபறியாகவே உள்ளது.





**சேகரின் ராஜ்ஜியம்!**

இரண்டு கழகங்களும் இந்த முறை மைலாப்பூரில் நட்சத்திரங்களைக் களமிறக்கியுள்ளன. மண்ணின் மைந்தனான எஸ்.வி.சேகர், தொகுதியின் ஒரு இண்டு இடுக்கு விடாமல் டோர் கேன்வாஸிங் செய்து வருகிறார். நடிகர்கள் சிலரும் அவருக்கு

# சென்னை மண்டலம்

ஆதரவு திரட்டி வருகிறார்கள். அதே சமயம் தி.மு.க.வின் நெப்போலியனுக்கு ஆதரவாக கலைஞர், ஸ்டாலின், சிதம்பரம் ஆகியோர் வோட்டு வேட்டையாடி உள்ளனர். நெப்போலியன் தன் தொகுதியில் அதிகம் பிரசாரம் செய்யாமல் வெளித் தொகுதிகளில் தன் கூட்டணிக்கு ஆதரவு





திரட்டி வருகிறார். ஒரு குறிப்பிட்ட சமுதாயத்தின் வாக்குகள் இரட்டை இலையை முளைக்கச் செய்துவிடும் என்ற நம்பிக்கையில் உற்சாகமாக இருக்கின்றனர் ரத்தங்கள். இந்தக் குறையைப் போக்க தி.மு.க.வின் நபூ. ராமஜெயம் தீவிரமாகக் களத்தில் இறங்கியுள்ளார். தயாநிதி மாறன் சமீபகாலமாக சர்ச்சையில் சிக்கி வருவது இந்தத் தொகுதியைப் பொறுத்தவரை பெரிதாக பாதிப்பு எதையும் நிகழ்த்தவில்லை. "எனக்கென்னவோ இது ஒரு ரூபா போனால் பாதிக்கப்பட்டவங்க கிளப்பி விட்ட விஷயம்னு நினைக்கிறேன். அதே சமயம் இந்த டி.டி. ஹெச்சு., டாட்டா பத்தியெல்லாம் யாரும் நினைச்சுப் பார்க்க மாட்டாங்க. அதனால தி.மு.க.வுக்கு எந்தப் பிரச்னையும் வராது'' என்றார் லட்சுமண். பிரசாரம், நம்பிக்கை, வாக்குறுதிகள் அடிப்படையில் அ.தி.மு.க. ஜெயிக்கவே வாய்ப்புகள் அதிகம் உள்ளதாகத் தெரிகிறது.

**சி.பி.எம்.முக்கு ஜே!**

தொழிலாளர்கள் அதிகம் வசிக்கும் தொகுதி பெரம்பூர். களத்தில் இருப்பவர்கள் சி.பி.எம்.மின் மகேந்திரன் மற்றும் ம.தி.மு.க.வின் சார்பாக வேளச்சேரி மணிமாறன். காலை முதல் மாலை வரை வீட்டுக்கு வீடு சென்று பிரசாரம், மாலைக்குப் பிறகு சைக்கிள் பேரணி என்று சுறுசுறுப்பாக வலம் வருகிறார் மணிமாறன். ரத்தங்கள் தங்கள் பங்குக்கு கலைஞர், தயாநிதி என்று அள்ளி விடுகின்றனர். ஆனால் மக்கள் என்ன நினைக்கின்றனர்? "எலெக்ஷன் முடிஞ்ச பிறகு தயாநிதி பிரச்னைல பிரதமர் தலையிட்டு, அவர் தப்பு செய்திருந்தார்னா உடனே நடவடிக்கை எடுக்கணும். அதே சமயம் எலெக்ஷன் சமயத்துல இந்தப் பிரச்னை வந்திருக்கறதால தி.மு.க.வுக்கு பாதிப்பு ஏற்பட வாய்ப்பிருக்கு" என்றார்



• மியாகான்

ராஜா. சுனாமி மற்றும் வெள்ள நிவாரணம் வாங்கித் தருவதில் மகேந்திரன் காட்டிய அக்கறை மற்றும் உழைப்பு தொகுதி மக்களை மயங்க வைத்துள்ளது. இங்கு மணிமாறனை வெளியூர்க்காரராக மக்கள் பார்ப்பது அவருக்கு மைனஸாக உள்ளது. தொகுதிக்கு நிறைய செய்திருந்தாலும், இன்னும் செய்ய வேண்டியது நிறைய இருக்கிறது என்கிறார் தொகுதிவாசியான டைலர் ஜெயராமன். கடைசி கட்ட நிலவரப்படி மகேந்திரனே பந்தயத்தில் முந்திக் கொண்டிருக்கிறார்.

### உதிப்பது சூரியன்தான்!

தி.மு.க. மற்றும் ம.தி.மு.க.வின் துணைப் பொதுச் செயலாளர்கள் முறையே பரிதி இளம்வழுதி மற்றும் மல்லை சத்யா இருவரும் உரசிக்கொள்ளும் தொகுதி எழும்பூர். ஆற்காட்டார், ப.சிதம்பரம் போன்ற தி.மு.க. அணியின் நட்சத்திர பிரசாரகர்கள் பரிதிக்கு ஆதரவு திரட்டி வருகிறார்கள். மல்லை சத்யா மாமல்லபுரத்தைச் சேர்ந்தவராக இருப்பது மிகப் பெரிய மைனஸாக இருக்கிறது. அதை எதிர்கொள்ள தொகுதியின் உள்ளூர் ரத்தங்கள் நிறைய போராட வேண்டியிருக்கிறது என்பது பிரசாரத்தில் தெளிவாகத் தெரிகிறது. செலவைப் பொறுத்தவரை பம்பரம் சற்றுக் கூடுதலாகவே சுழல்கிறது. "பொதுவாக வெளியூர்க்காரரால்தான் இந்தத் தொகுதியில் கடுமையான போட்டியைக் கொடுக்க முடியும். கடந்த தேர்தலில்கூட சொற்ப வோட்டுகளில் தான் பரிதி ஜெயிக்க முடிந்தது. ஆனால் இந்த முறை அது நடக்காது" என்றார் ஒரு அ.தி.மு.க.காரர். பிரசாரம், கூட்டணி பலம் ஆகியவற்றை வைத்துப் பார்க்கும் போது உதயசூரியன் உதிக்கவே வாய்ப்புகள் அதிகம் உள்ளதாகத் தெரிகிறது.

### ஸ்டாலின் விளக்கு!

மு.க.ஸ்டாலின் மற்றும் அ.தி.மு.க.வின் ஆதிராஜாராம் இருவரும் பலப்பரீட்சையில் இறங்கியிருக்கும் தொகுதி ஆயிரம் விளக்கு. அ.தி.மு.க.வின் வேட்பாளராக ஆதிராஜாராமைப் போட்டது போட்டியைக் கடுமையாக ஆக்கியுள்ளது. கிட்டத்தட்ட தி.மு.க. கூட்டணியின் முக்கியஸ்தர்கள் அனைவரும் ஸ்டாலினுக்காக வோட்டு சேகரித்துவிட்டார்கள். அ.தி.மு.க.வுக்கு ஆதரவாக முதல்வர் கடைசி நேரத்தில் ஒருமுறை பிரசாரம் செய்தால் தங்களுக்கு வெற்றி வாய்ப்பு அதிகரித்துவிடும் என்கின்றனர் ரத்தங்கள். தொகுதிக்குள் தனக்கு இருக்கும் செல்வாக்கு, கூட்டணி பலம், பிரசாரம் ஆகியவற்றால் ஸ்டாலின் பந்தயத்தில் முந்திக் கொண்டிருக்கிறார். மத்திய சென்னையில் இந்தத் தொகுதி வந்தாலும், தென்சென்னை மாவட்ட ரத்தங்கள் தான் அதிகம் தேர்தல் வேலையில் ஈடுபடுகின்றனர். 'எம்.எல்.ஏ.வாக இருந்த போது செய்ததைச் சொல்லாமல், மேயராக இருந்தபோது செய்ததையே சொல்லி வாக்கு கேட்கிறார் ஸ்டாலின். இது எடுபடாது'' என்கிறார் தொகுதியில் பூக்கடை நடத்திவரும் நாராயணன். கடைசி கட்ட நிலவரப்படி, போட்டி கடுமையாக இருந்தாலும் உதயசூரியனுக்கே வெற்றி!



• செந்தமிழன்



• வி.எஸ்.பாபு



• வெங்கடேஷ்பாபு

### வெற்றி 'ப'வுக்கே!

அ.தி.மு.க. சார்பாக வெங்கடேஷ் பாபுவும், தி.மு.க. சார்பாக வி.எஸ்.பாபுவும் புரசைவாக்கத்தில் போட்டியிடுகின்றனர். இருவருமே தொகுதிக்கு நன்கு அறிமுகமானவர்கள். வெங்கடேஷ்பாபு கூட்டணிக் கட்சியினர் சகிதம் தெருத் தெருவாகச் சென்று வாக்கு கேட்டு வரு

# சென்னை மண்டலம்

கிறார். தி.மு.க.வின் வி.எஸ். பாபுவும் போட்டிபோட்டு பிரசாரத்தில் சூடுகிளப்பி வருகிறார். சிட்டிங் எம்.எல்.ஏ. ரங்கநாதனுக்கே சீட் தரப்பட்டிருந்தால் தி.மு.க.வின் வெற்றி எளிதாக இருந்திருக்கும். இதைத் தெரிந்து என்பதால்தான் என்கின்றனர் ரத்தங்கள். ஆனால், ஊரைக் காவல் காக்கும் போது தலையாரி வீட்டில் களவு போய்விடக் கூடாது என்பதில் கலைஞர் முன்னெச்சரிக்கையுடன் இருக்கிறார்











* பரிதி * மணிமாறன் * பாஸ்கரன் * ஆதிராஜாராம் * சத்யா

கொண்டு தி.மு.க. இங்கு தனது பிரசார பீரங்கிகளைக் களமிறக்கியுள்ளது. மன நலம் மற்றும் ஈ.எஸ்.ஐ. மருத்துவமனைகளை தரம் உயர்த்துவேன். பள்ளிகளை மேம்படுத்துவேன் என்பது போன்ற வாக்குறுதிகளை அளிக்கிறார் வி.எஸ். பாபு. கிட்டத்தட்ட இதே வாக்குறுதிகளையே முன்வைக்கிறார் வெங்கடேஷ் பாபு. வைட்டமின் 'ப' அடிப்படையில் அ.தி.மு.க. பலமாக இருப்பதும், தனிப்பட்ட முறையில் கடுமையாகப் பிரசாரம் செய்வதும் புரசைவாக்கத்தில் அ.தி.மு.க. ஜெயிக்க வாய்ப்புள்ளதாகவே தெரிகிறது.

## இறுதியாக உறுதி!

இதுவரை இல்லாத அளவுக்கு கலைஞர் தனது தொகுதியான சேப்பாக்கத்தில் இந்தமுறை அதிக நாட்கள் பிரசாரத்தில் ஈடுபட்டுள்ளார். காரணம் போட்டியிடும் வேட்பாளர் காயிதே மில்லத்தின் பேரன் என்பதையே இது காட்டுகிறது என்கிறார் நம்மிடம் பேசிய தொகுதிவாசியான ஹயாத்கான். அவரே மேலும் பேசும் போது, "ஒருவேளை மியாகான் இரட்டை இலையில் போட்டியிட்டால் கலைஞருக்கு விழும் வாக்குகளையாவது குறைத்திருக்கலாம். ஆனால் அவர் வாழைப்பழத்தைத் தேர்ந்தெடுத்து விட்டார். இது அ.தி.மு.க.வினரைச் சோர்வடையச் செய்துவிட்டது" என்றார். சரி, தயாநிதியின் சமீபகால சர்ச்சைகள் பற்றி தாத்தா தொகுதியில் என்ன ரியாக்ஷன்? "இந்தப் பிரச்னைல சம்பந்தப்பட்ட டாட்டா இதுவரைக்கும் வாயே திறக்கல. இதுவே தயாநிதி மேல எந்தத் தப்பும் இல்லன்னு தெரியுது. தயாநிதியைப் பத்திப் பேசறதைத் தவிர அவங்களுக்கு வேற இஷ்யூ எதுவும் இல்ல. ஆனா இது மக்கள்கிட்ட எடுபடாது. இந்த அனாவசிய சர்ச்சையால் எந்தச் சரிவும் எங்களுக்குக் கிடையாது" என்றார் அச்சுதன். எது எப்படியோ, இறுதி நிலவரப்படி கலைஞரின் வெற்றி இந்தத் தொகுதியில் உறுதி செய்யப்பட்டதாகவே தெரிகிறது.

- ஆர்.முத்துக்குமார்
படங்கள் : ராஜன்

* சஜீத் * ராஜா * லட்சுமண் * அச்சுதன்









கொளுத்தும் கோடையில் சத்தமில்லாமல் வந்து தாக்கும் தலைவலிகள் குறித்து எச்சரிக்கிறார், சென்னை சைல்டு ட்ரஸ்ட் மற்றும் விஜயா ஹெல்த் சென்டர் மருத்துவமனைகளில் காது, மூக்கு, தொண்டை நிபுணராகப் பணிபுரிந்து வரும் டாக்டர் ராமகிருஷ்ணன்.

"குழந்தைகள், இளையோர், முதியோர் என மூன்று தரப்பினருக்கும் கோடை காலத்தில் தண்ணீரால் பிரச்னை ஏற்படுகிறது. கோடையில் அடிக்கடி தண்ணீர் அருந்த வேண்டிய வறட்சியான உணர்வு காரணமாகப் போகுமிடங்களில் எல்லாம் பாதுகாப்பற்ற தண்ணீரையும், சுகாதாரமற்ற தண்ணீரில் தயாரிக்கப்படும் பழச்சாறையும் அருந்துகிறார்கள். இதனால் முதலில் ஜலதோஷம், பிறகு இருமல், சளி ஏற்பட்டு தலைவலி வருகிறது. மேலும் கோடை காலத்தில் போதுமான தண்ணீர் அருந்தாத பலருக்கும் மலச்சிக்கல் காரணமாக வயிற்றில் அமிலத் தன்மை அதிகரித்து தலைவலி ஏற்படும். நாற்பது வயதைக் கடந்த ரத்த அழுத்த நோயாளிகளுக்கு ரத்த அழுத்தம் அதிகரிக்கும் போது தலைவலி வரும். மேலும், ஏப்ரல் மே, மாதங்களில் பரீட்சை எழுதும் கல்லூரி மாணவர்களுக்கு மன அழுத்தம் காரணமாகத் தலைவலி வரும். அதே போல் இருமல், சளியின் தொடர்ச்சியாக குழந்தைகளுக்கு மூக்கின் பின்புறமுள்ள அடினாய்டில் நோய்த் தொற்று ஏற்பட்டு தலைவலி வரும். குழந்தைகளின் தலைவலியைப் புரிந்துகொள்ளாத பெரியவர்கள், குழந்தை ஏன் அழுகிறது என்று குழம்பிப் போவார்கள். அடினாய்டு தொற்று காரணமாக, தலைவலியில் துடிக்கும் பல குழந்தைகளின் மூக்கிலிருந்து ரத்தம் வரலாம். அப்படி வந்தால் என்னவோ ஏதோ என்று பதற்றப்படாமல் உங்கள் ஈஎன்டி டாக்டரிடம் அழைத்துச் சென்று அடினாய்டு தொற்றைக் கண்டறிந்து, அது சைனஸுக்குப் பரவும் முன்பு உடனடி சிகிச்சை தரவேண்டும். தவிர குழந்தைகளுக்குக் குடலில் நாக்குப் பூச்சி இருந்தாலும் தலைவலி வரும். இவைதவிர கோடை மற்றும் குளிர் காலங்களில் கண்களில் உள்ள தசைகளில் பிடிப்பு ஏற்படும்போது முன் நெற்றி, பின் தலை என தலைவலி தோன்றும். எனவே எதனால் தலைவலி, எந்தவகைத் தலைவலி என்பதைக் கண்டறிந்து பொருத்தமான சிகிச்சை மேற்கொள்வதே தீர்வுக்கு வழி" எனும் ராமகிருஷ்ணன், தலைவலியின் தன்மையைப் பொறுத்து அவற்றை வகைப்படுத்துகிறார்.

"பெரும்பாலானவர்களுக்கு மைக்ரேன் தலைவலி கோடைகாலத்தில் வரலாம். மூளையின் ரத்தக் குழாய்கள், இயல்புக்கு மாறாகச் சிறிது அகண்டு விடுகின்றன. இதனால் வழக்கத்தைவிட அதிக அளவு ரத்தமானது, அகண்ட ரத்தக் குழாய்களின் வழியே அதிவேகமாகப் பாயும்போது ஏற்படும் அசௌகரியம் தலைவலியாக மாறுகிறது. இதுதான் மைக்ரேன் தலை வலி. இதைப் பல வகைகளாகப் பிரித்து விடலாம்.

மன இறுக்கம் காரணமாக ஏற்படும் டென்ஷன் ஹெட் ஏக், துடிக்கும் தலைவலி எனப்படும் கிளஸ்டர் ஹெட் ஏக், கழுத்தெலும்பு தேய்வினால் ஏற்படும் செர்விக்கல் ஸ்பான்டிலிட்டீஸ் ஹெட் ஏக், மன அழுத்தம், மனக்கவலை போன்றவற்றால் ஏற்படும் காம்பினேஷன் ஹெட்

* முன்பக்கத் தலைவலி



* டென்ஷன் தலைவலி



* மைக்ரேன் தலைவலி





# கோடையில் தேடி வரும் தலைவலிகள்!

ஏக், மூளையின் இரத்தக் குழாயில் ஏற்படும் வீக்கம் காரணமாகத் தோன்றும் டெம்ப்ரல் ஹெட் ஏக் போன்றவற்றைக் குறிப்பிடலாம். இவை தவிர, சில மருந்துகளின் பக்க விளைவு காரணமாக ஏற்படும் தலைவலி, காபி, டீ அதிகம் அருந்துதல், தூக்கமின்மை போன்றவற்றால் ஏற்படும் தலைவலி, சைனஸ் பிரச்னையில் ஏற்படும் தலைவலி என அடுக்கிக்கொண்டே போகலாம்.

என்ன வகைத் தலைவலி என்பதைக் கண்டறிய ஈஸ்னோபிலியா, ஹீமோகுளோபின், ஈ.எஸ்.ஆர். சோதனைகளைச் செய்தாலே போதும். தலைவலிகளில் இருந்து தப்பிக்க முதல் வழியும், முக்கியமான வழியும் எது தெரியுமா? தினசரி மூன்று முதல் நான்கு லிட்டர் தூய தண்ணீர் அருந்துவதே. அதேபோல உணவை ஒரே வேளையில் வைத்துத் திணிக்காமல், இரண்டு மணி நேரத்துக்கு ஒருமுறை என்றவாறு பிரித்துச் சாப்பிடுவது முக்கியம். பாட்டில் பானங்களைத் தவிர்த்து தண்ணீர் கலக்காத பழச் சாறுகளைச் சாப்பிடலாம். கண்கள் சூரிய ஒளியை நேரடியாகக் கிரகிக்காமல் இருக்க சன் கிளாஸ் கட்டாயம் அணிய வேண்டும். கோடையில் மைக்ரேன் தலைவலி வந்தால் வலி நிவாரணி சாப்பிட்டு இருட்டு அறையில் ஓய்வு எடுத்தாலே போதும். மனப் பயிற்சி, தியானப் பயிற்சி மூலமும் மைக்ரேனைத் துரத்தி அடிக்கலாம். அதற்குமுன் என்ன வகை தலைவலி என்பதைத் துல்லியமாகத் தெரிந்து கொள்வது நோயாளியின் மன அழுத்தத்தைப் போக்கும்'' என்று அறிவுறுத்துகிறார் டாக்டர் ராமகிருஷ்ணன்.



• டாக்டர் ராமகிருஷ்ணன்

- ஸ்ரீ

படம் : புதூர் சரவணன்



# கல்கி



2006 மே 14
விய சித்திரை 31
மலர் : 64
இதழ் : 41

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - *பாரதியார்.*

## குஜராத்தில் கலவரத் தீப்பொறி!

முரட்டுக் கும்பல் ஒரு காரைத் தாக்கி எரித்துவிட, அதை ஓட்டி வந்தவர் உயிரோடு கொளுத்தப்பட்டு மாண்டிருக்கிறார். ஆனால், காவல்துறை, அவர் விபத்தில் தீக்கிரையானதாகக் கூறி உண்மையை மறைக்கப் பார்த்திருக்கிறது. பின்னர், வேறு வழியின்றி, நடந்த உண்மையை ஒப்புக்கொண்டும் இருக்கிறது. பரோடாவில் நடந்துள்ளது இந்தக் கொடுமை!

காவல்துறை எதற்காக உண்மையை மறைக்க முயற்சி செய்ய வேண்டும்?

பரோடாவில் சாலைகளை அகலப்படுத்தும் முயற்சியில் சுமார் 1500 கட்டடங்கள் இடித்துத் தள்ளப்பட்டுள்ளன. இவை எல்லாமே சட்டத்துக்குப் புறம்பாக நிலத்தை ஆக்கிரமித்துக் கட்டப்பட்டவை என்கிறது மாநகராட்சி.

சையத் ஸார்ஸிதின் பாபா தர்காவை இவ்விதமாக இடித்துத் தள்ள முயன்றபோது, பொது மக்கள் ஆட்சேபித்துத் தடுத்துள்ளனர். ஆனால், அவர்களுடைய உணர்வுகளைப் புறக்கணித்து இயங்கியிருக்கிறது மாநகராட்சி.

மக்கள் வெகுண்டு எழ, கலவரம் மூண்டு ஐந்து பேர் பலியாகியுள்ளனர்! (காரில் உயிரோடு எரிக்கப்பட்டு ஒருவர் பலியானது, இந்தச் சம்பவத்தின் தொடர்ச்சியாக மறுநாள் நிகழ்ந்த வன்முறையில்.)

"முன்கூட்டியே தெரிவித்துவிட்டுத்தான் இடிக்கும் பணியை மேற்கொண்டோம். இதுவரை இடிக்கப்பட்ட கட்டடங்களுள் ஒரு டஜன் வழிபாட்டுத் தலங்களும் அடக்கம். இந்த தர்காவுக்கு மட்டும் ஏன் விதிவிலக்கு தர வேண்டும்?" என்பது மாநகராட்சி






யின் வாதம்.

"இந்த தர்கா வெறும் புறம்போக்கு ஆக்கிரமிப்பு அல்ல. இது முந்நூறு ஆண்டு பழைமை வாய்ந்தது" என்பது அப்பகுதி முஸ்லிம் மக்களின் வாதம். முந்நூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட தர்கா எனில், அது எப்படி ஆக்கிரமிப்பு ஆகும்? சாலைதான் தர்கா நிலத்தை ஆக்கிரமிப்பதாகவல்லவா ஆகும்?

ஆட்சேபணை - அதிலும் நியாயமானதும் உணர்வுபூர்வமானதுமான ஆட்சேபணை எழுகிறபோது, ஒரு வழிபாட்டுத் தலத்தை இடிப்பது மிக அபாயகரமான செயல்.

சையத் ஸார்ஷிதின் பாபா தர்காவைத் தகர்க்காமலே சாலையை அதன் இருபுறமும் அகலப்படுத்த முடியுமா? அல்லது தர்காவை, அங்கு தொழுவோரின் சம்மதத்துடன் வேறு இடத்துக்குப் பெயர்த்தெடுத்துச் சென்று புனர் நிர்மாணம் செய்ய முடியுமா? என்றெல்லாம் ஆராய்ந்து முடிவெடுத்திருக்க வேண்டும். இதற்குப் பேச்சு வார்த்தைகள் நடத்தியிருக்க வேண்டும்.

ஆனால், மோடி தலைமையிலான குஜராத் அரசு இதுபோன்ற சமரச திட்டங்களை யோசியாமல் அராஜகங்களுக்கே இடங்கொடுத்து வருகிறது. ஆட்சியில் இருப்போரின் மனப்போக்கையொட்டியே காவல்துறையும் மாநகராட்சியும் செயல்படுகின்றன.

கோத்ரா சம்பவத்தைத் தொடர்ந்த மதக் கலவரங்கள் நிகழ்ந்த பிறகு, குஜராத் அரசுக்கும் சரி, குஜராத் காவல்துறைக்கும் சரி, மிகப் பெரிய களங்கம் ஏற்பட்டது. அந்தக் களங்கம் போக்கப்படுவதற்கு முன்னதாக இப்போது புதிய களங்கம் விளை வதற்கான அறிகுறிகள் எழுந்துள்ளன.

குஜராத் முதல்வர் மோடி இந்த விஷயத்தை அரசியலாக்கி வேடிக்கை பார்க்காமல், இனியேனும் மக்களின் உணர்வுகளை மதித்து நடக்கும்படி ஆணைகள் பிறப்பிக்க வேண்டும். அவ்வாறு முதல்வர் இயங்க, பா.ஜ.க. தலைமை அவரை வலியுறுத்த வேண்டும். இல்லாவிட்டால் பரோடா தீப்பொறி நாளை மாபெரும் தீயாகப் பரவ வாய்ப்பு உண்டு.

சமீப காலங்களில் மிகப் பெரிய சோதனைகளிலிருந்து குஜராத் மாநிலம் மீண்டெழுந்து மறுபிறவி எடுத்திருக்கிறது. அம் மாநில மக்களிடம் அதற்கான நெஞ்சுரமும் சுறுசுறுப்பும் நிரம்ப உண்டு என்பது உண்மையே. ஆனால் அவர்களுடைய மீண்டெழும் திறனைத் திரும்பத் திரும்பச் சோதிக்கலாகாது. ●

# ரோஜா மலரே ராஜகுமாரி...

"மாடலிங் உலகம் ஆச்சர்யமானது. என்னை ஆரம்பத்துல நிராகரிச்சுட்டாங்க. அவங்களுக்கு நல்ல உயரம், இல்லாட்டி பூசணிக்கா மாதிரிதான் மாடல்கள் இருக்கணும். 'மாடல்னா ஏதாவது சின்ன குறை யாவது இருக்கணும். உன்னை மாதிரி பெர்ஃபெக்டா இருக்கக் கூடாது'ன்னு கைநீட்டி குறை சொன்னாங்க. என்னோட சினிமா ஆசை, சின்ன வயசு லேர்ந்து என் அம்மாவால ஊட்டப்பட்டது. இதனால ப்ளஸ்டுவோட படிப்பை நிறுத்தி சினிமாவுல இறங்க ரெடியாயிட்டேன். எனக்குத் தமிழ்ல ரொம்பப் பிடிச்ச பாட்டு, 'ரோஜா மலரே ராஜகுமாரி'தான். நாளைக்கு ரசிகர்களும் இதே மாதிரி என்னைப் பார்த்துப் பாடணும்னு ஆசை" என்று சாவகாசமாகத் தமது பயோடேட்டாவை சொல்லிக் கொண்டிருந்தார் தமிழ் சினிமாவுக்குள் வெகு சீக்கிரத்தில் குதிக்கவிருக்கும் பிரபல மாடலான அஞ்சலி.

"உஸ்... போரடிக்காமல் பேசுங்களேன்" என்று அவரைச் சீண்டிவிட்டதுதான் தாமதம், பழமொழி, புத்திசாலித்தனம் என்று வேறு உலகத்துக்கு நம்மைக் கொண்டு சென்று விட்டார்.

**கடினமானது** : குட் ப்ளட்... பேட் ப்ளட் - இந்த வார்த்தையை வேகமா உச்சரிக்கச் சொன்னா எனக்கு முதல் தடவையே நாக்கு தடம் புரண்டுடும்.

**பழமொழி** : ரசம் மணப்பது எதனால், போர்வீரன் போரில் தோற்பது எதனால்? இரண்டுக்கும் ஒரே விடை - பெருங்காயம்!

**உங்க புத்திசாலித்தனத்துக்குச் சில உதாரணங்கள்...**

1. உங்க வீட்ல எறும்பு நிறைய இருக்கா, அதை க்ளோஸ் பண்ண அஞ்சலியோட 'ஆபரேஷன் டுஷ்கான்' - சர்க்கரையோட மிளகாய்ப் பொடியைக் கலந்து நைஸா வைச்சிருங்க (பின்னாடியிருந்து எறும்பு பார்க்குதான்னு செக் செய்றது அவசியம்). ஹி.... ஹி... பாவம் எறும்பு, அதை சர்க்கரைன்னு நினைச்சு சாப்பிடும். உடனே அதோட நாக்கு காரத்துல எரியும். மினரல் வாட்டர் கேட்கும். கொடுக்கவே கொடுக்காதீங்க. அவ்ளோதான் எறும்பெல்லாம் காலி.

2. சரி, கொசுவை எப்படிக் கொல்லணும் தெரியுமா? அதை உயிரோடு பிடிச்சு பெட்ல கிடத்தி அதோட கால் ரெண்டையும் இறுக்கமா கட்டிலோட கட்டிப் போட்டுடுங்க. கவனம், கொஞ்சம்கூட கொசு அசையக்கூடாது. அப்புறம்தான் மேட்டர், கொசுவோட கையைப் பிடிச்சு நைஸா 'நண்டு ஊறுது நரி ஊறுது'ன்னு சொல்லிக்கிட்டே மெல்லப் போய் கிச்சு கிச்சு மூட்டுங்க. அவனோதான் சிரிச்சே கொசு காலியாயிடும்.

"கடவுளே!"

- சநகன்

அட்டை, படம் : ஆண்டனி ஸ்ரீதர்










Buy the third issue (April 15, 2006)
Find the coupon on page No:7
Fill it up neat and clear

Mail it to: Thd Editor, Gokulam Calibre Comics,
'KALKI Buildings',
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032
And
GET YOURSELF THE FIRST TWO ISSUES OF
GCC (February 15, 2006 and March 15, 2006)
ABSOLUTELY FREE ! *

* HURRY! only until stocks last!

GOKULAM CALIBRE COMICS

For Wholesome Development...

**வி**ஜயகாந்த், இலவச கறவை மாடு வழங்கும் திட்டத்தை வாக்குறுதியில் அறிமுகப்படுத்தியுள்ளதைப் பார்த்து ஒரு பத்திரிகை, நடிகர் விவேக்கை நிருபராக அனுப்பி அவரிடம் பேட்டி எடுத்து வரச் சொல்கிறது.

**விவேக்** : வணக்கம் கேப்டன்!

**விஜயகாந்த்** : அடடே, வாப்பா விவேக்! கட்சியில சேர வந்துட்டியா? நல்லவேளை ஒரு நடிகர் சங்கத் தலைவர் ஆரம்பிச்ச கட்சியில, பேர் சொல்ற மாதிரி ஒரு நடிகர்கூட இல்லைங்கிற குறையைப் போக்கிட்ட.

**விவேக்** : கேப்டன். நான் கட்சியில சேர வரலை. பத்திரிகை நிருபரா வந்திருக்கேன்.

**விஜயகாந்த்** : என்ன நிருபராவா? உனக்கு ஷூட்டிங் இல்லையா?

**விவேக்** : சினி ஃபீல்டு மொத்தமும் பிரசாரத்துக்குக் கிளம்பிட்டதால எலெக்ஷன் முடியறவரைக்கும் எந்த ஷூட்டிங்கும் இல்லை... கொடுமை பாருங்க இந்த மேட்டரை ஒரு நடிகர் சங்கத் தலைவருக்கு நான் சொல்ல வேண்டியிருக்கு.

**விஜயகாந்த்** : என்னப்பா பண்றது, கட்சி வேலை எல்லாத்தையும் நானே பார்க்க வேண்டியிருக்கே.

**விவேக்** : ஏன் கேப்டன், உங்க கட்சியில உங்களைத் தவிர வேற ஆளுங்களே இல்லியா?

**விஜயகாந்த்** : நக்கலா! ஆமா, எல்லா நடிகை, நடிகர்களும் கட்சிகள்ல சேர்ந்து சினிஃபீல்டை மணிஃபீல்டா மாத்த முயற்சி பண்ணிட்டிருக்காங்களே... நீ ஏன் எதுலயும் சேரல?

**விவேக்** : சாரி கேப்டன், வர்ற எலெக்ஷன்ல நானே ஒரு கட்சியைத் தொடங்கலாம்னு இருக்கேன். பேட்டியை ஆரம்பிக்கலாமா?

**விஜயகாந்த்** : ஆரம்பிப்போம்.

**விவேக்** : நீங்க இலவச கறவை மாடு வழங்கறதா சொல்லியிருக்கீங்க. நான் ஜெர்ஸி கறவை மாடு கேள்விப்பட்டிருக்கேன். அதென்ன இலவச கறவை மாடு... அது இலவசமா பால் கறக்குமா?

**விஜயகாந்த்** : நக்கல்தானே வேணாங்கிறது. இலவச கறவை மாடுன்னா நாங்க இலவசமா தரப்போற கறவை மாடுப்பா.

**விவேக்** : சாரி கேப்டன். நீங்க தரப்போற கறவை மாடு எத்தனை லிட்டர் பால் கறக்கும்?

**விஜயகாந்த்** : அது வருமானத்தை வெச்சு முடிவு செய்யப்படும்.

**விவேக்** : வருமானம்னா, மாட்டோட வருமானமா? நாட்டோட வருமானமா? வீட்டோட வருமானமா?

**விஜயகாந்த்** : வீட்டோட வருமானத்தை வெச்சுத்தான். இப்போ ஒரு வீட்டோட வருமானம் மாசம் இருபத்திரெண்டாயிரம்னு வெச்சுக்கோ அவங்களுக்கு நாள் ஒண்ணுக்கு அஞ்சு லிட்டர் பால் கறக்கற மாடும், பன்னிரண்டாயிரம்



வருமானம்னா பத்து லிட்டர் கறக்கற மாடும், அதுக்கும் கீழே வருமானம்னா பதினைஞ்சு லிட்டர் கறக்கற மாடும் தரலாம்னு இருக்கேன்.

**விவேக்** : ஓ.கே. கேப்டன் தீவனத்துக்கு என்ன பிளான் பண்ணிருக்கீங்க?

**விஜயகாந்த்** : அதுக்குத்தான் மாசம் பதினைஞ்சு கிலோ அரிசியை இலவசமா தரப்போறோமே?

**விவேக்** : அவங்க லஞ்சம் வாங்கிக் கிட்டு பொய் ரிப்போர்ட் கொடுத்தா?

**விஜயகாந்த்** : உடனே டிஸ்மிஸ் பண்றதோட ஒரு மணி நேரம் அவங்க கிட்ட வசனம் பேசி அவங்களை உண்டு இல்லைன்னு ஆக்கிடுவேன்.

**விவேக்** : உங்களோட இந்த மாட்டு

# ஃப்ரீயா தரேன் மாமே!

திட்டத்துக்கு ராமராஜன் உதவிகரமா இருப்பாரே.. அவரை கட்சி யில சேர்த்துக்க ஏன் முடிவு பண்ணல?

**விஜயகாந்த்** : அவர்தான் 'அம்மா அம்மா'ன்னுகிட்டு இருக்காரே.

**விவேக்** : சரி கேப்டன்... உங்களோட திட்டத்துக்கு லட்சக்கணக்குல மாடுகள் தேவைப்படுமே, அதுக்கு என்ன பண்ணப் போறீங்க?

**விஜயகாந்த்** : ஆட்சிக்கு வந்ததும் ஆயிரக்கணக்குல கன்னுக்குட்டிகளை வாங்கி வளர்க்கப் போறேன்.

**விவேக்** : என்னது, ஆயிரக்கணக்குல கன்னுக்குட்டிகளை வாங்கி வளர்க்கப் போறீங்களா?

**விஜயகாந்த்** : ஆமாம். அதுங்க நாலரை வருஷத்துல லட்சக்கணக்குல ஆயிடும். அப்படி ஆனதும் கொடுத்துடு வோம்.

**விவேக்** : என்ன சொல்றீங்க கேப்டன் நாலரை வருஷம் கழிச்சுத் தரப்போறீங் களா?

**விஜயகாந்த்** : எலெக்ஷனுக்கு ஆறு மாசத்துக்கு முன்னால கொடுத்தா தானப்பா ஜனங்க மறுக்காம அடுத்த எலெக்ஷன்லயும் எனக்கே வோட்டுப் போடுவாங்க.

**விவேக்** : கேப்டன்... உங்க பார்வை சாதாரண பார்வையே இல்லை. தொலை... நோக்குப் பார்வை! எஸ்கேப்..."

**விவேக்** : (அதிர்ந்தபடி) ஆ! அப்போ நீங்க போடப் போறதா அறிவிச்சிருக்கிற அரிசி 'மனுஷன் சாப்பிடுவானா'ங் கிற ரேஞ்சுலதான் இருக்குமா?

**விஜயகாந்த்** : நான் அப்படிச் சொல்ல வரலைப்பா! பதினைஞ்சு கிலோ அரி சியை இலவசமா தர்றதால அவங்களுக்கு அரிசி செலவு மிச்சமாகுதில்ல. அதை வச்சு சமாளிச்சிக்கட்டும்னு சொல்ல வந்தேன்.

**விவேக்** : தீவனத்துக்கு ஓ.கே. மூசா, பூசான்னு ஏதேதோ போட வேண்டி யிருக்கே?

**விஜயகாந்த்** : அதை பாலை வித்தும், சாணியை வித்தும், கோமியத்தை வித்தும் வர்ற காசுல சமாளிச்சுக்கட்டும். மாட் டோட சேர்த்து எதை எதையெல்லாம் இலவசமா கொடுக்கறோம் பாரு. இது மட்டுமில்ல மாடு கன்னு போட்டா அதை மாடு வெச்சிருக்கிறவங்களுக்கே இல வசமா வேற தரப்போறோமே!

**விவேக்** : கேப்டன்! நீங்க இலவசமா கொடுக்கப் போற மாட்டை, வாங்கறவன் வித்துட்டா என்ன பண்ணுவீங்க?

**விஜயகாந்த்** : அதைக் கண்காணிக்க ரேஷன் கடையில கூடுதலா ரெண்டு பேரை நியமிக்கப் போறேன்.

கற்பனை : **வி.கு.**

தயாபரன் என்றொரு மன்னர் இருந்தார். சிறந்த நிர்வாகி. நல்ல எண்ணங்கள் கொண்டவர். அவர் ஆட்சியில் மக்கள் சுபிட்சமாக இருந்தனர். திடீரென அவருக்கு உடல் நலக்குறைவு ஏற்பட்டது.

ஆகவே தனக்குப் பதிலாக தன் மகன் சமரராஜனுக்கு முடிசூட்டினார். நிர்வாகத்திலும், நல்ல எண்ணங்களிலும் தந்தை தயாபரனுக்கு எந்த வகையிலும் குறைவு இல்லாதவன் சமரராஜன். இரண்டு ஆண்டுகள் நன்றாகவே ஆட்சி நடத்தினான். திடீரென அடுத்த ஆண்டிலிருந்து நாட்டில் பஞ்சம் ஏற்பட்டது. ஆங்காங்கே கலவரங்கள் உருவாயின. மக்கள் நிம்மதி இழந்தனர். மன்னனுக்கும் மனஉளைச்சல் ஏற்பட்டது.

அடுத்து என்ன செய்வது என்ற குழப்பத்தில் இருந்தான் மன்னன். தனக்கு வேண்டப்பட்ட ஒரு வாஸ்து நிபுணரை வரவழைத்துத் தன் பிரச்னைக்குத் தீர்வு காணச் சொன்னான். அவர் அரண்மனையில் உள்ள அனைத்துப் பகுதிகளையும் ஆராய்ந்து பார்த்தார். வாஸ்துப்படி எல்லாமே சரியான அமைப்பில் இருந்தது.

மறுநாள் அதிகாலை அரண்மனையைச் சுற்றி நடைபயிற்சி மேற்கொண்டார் அந்த வாஸ்து நிபுணர். அப்போதுதான் அவர் கண்ணில் அந்த அரண்மனைச் சுற்றுச்சுவர் பட்டது. அந்தச் சுவரில் ஒரு மிகப்பெரிய வெடிப்பு இருந்தது. பறவைகள் பழங்களைச் சாப்பிட்ட பிறகு எஞ்சியிருக்கும் விதைகள் அந்த வெடிப்புக்குள் விழுந்து, சின்னச் சின்ன செடிகள் முளைத்து இருந்தன.

பிரச்னையின் மூல காரணம் அது தான் என்பது அந்த வாஸ்து நிபுணருக்குப் புரிந்துவிட்டது. உடனடியாக மன்னன் சமரராஜனிடம் விஷயத்தைச் சொன்னார் வாஸ்து நிபுணர். அதற்குத் தீர்வாக, வெடிப்பு இருக்கும் சுற்றுச்சுவரை இடித்துவிட்டு, முன்பைவிடப் பலமாக புதிதாகச் சுவர் அமைப்பது என்று முடிவு செய்யப்பட்டது. அதன்படி சுற்றுச்சுவரும் கட்டப்பட்டது. அதன்பிறகு, நாட்டில் மாற்றங்கள் ஏற்படத் துவங்கின.

அங்கு நிலவிய ஏனைய பிரச்னைகளுக்குத் தீர்வு கிடைத்தது. நாடு மீண்டும் சுபிட்ச நிலையை அடைந்தது.

இப்பொழுது புரிகிறதா? சுற்றுச்சுவர் என்பது எவ்வளவு முக்கியமான விஷயம் என்பது. சர்வ வசதிகளும் கொண்ட அரண்மனைக்கே சுற்றுச்சுவரில் வாஸ்து குறை இருக்கக்கூடாது என்றால், நம் வீட்டு சுற்றுச்சுவரைக் கட்டுவதில் எவ்வளவு கவனம் தேவை என்பது புரிந்திருக்குமே. சரி... அடுத்த விஷயத்துக்கு வருவோம்.

# தெருக்குத்து தெரியுமா?



பொதுவாக எல்லோருக்கும் ஒரு சந்தேகம் உண்டு. நம் வீட்டுக்கு எதிரே தெரு வரலாமா, கூடாதா? நம் வீட்டுக்கு எதிரே தெருவோ அல்லது சந்தோ இருந்தால் அதற்கு தெருக்குத்து (சந்துக்குத்து) என்று பெயர். சந்து இருப்பதாலேயே நம் வீட்டுக்கு வாஸ்து குறைபாடு வந்துவிடும் என்று சொல்லிவிட முடியாது. அந்தத் தெருவின் அகலத்தை விட நம் வீட்டின் அகலம் அதிகமாக இருந்தால் பிரச்னை வர வாய்ப்பில்லை. அதேபோல அந்தத் தெரு முடிவடையாமல் நீண்டு கொண்டே போனாலும் பிரச்னை இல்லை. மேலும் நம் வீடு கிழக்கு / வடக்காகப்

வளம் தரும் வாஸ்து - 4

காஞ்

பார்த்து இருக்குமானால் கவலைப்படத் தேவையில்லை.

பின்னே எப்படி இருந்தால்தான் பிரச்னை? மேலே சொன்ன வகையில் அமையாமல் வேறு மாதிரி அமைந்திருக்குமானால், அதில் வாஸ்துப்படி குறைபாடு இருக்கிறது. அதாவது தெருக்குத்து இருக்கிறது என்று அர்த்தம்.

இதற்குப் பரிகாரமாக தெருவின் மத்தியில், நம் வீட்டின் முன் பகுதியில் தெருவை நோக்கியபடி, ஒரு வலம்புரி விநாயகர் சிலையை வைத்து, அனுதினமும் பூஜை செய்யும்போது அந்தத் தெருக்குத்து நீங்கும். பிரச்னைகள் தீரும். சரி... விநாயகரை வணங்காதவர்கள் எப்படி தெருக்குத்தைச் சரிசெய்து கொள்வது? அதற்கும் தீர்வு இருக்கிறது.

நம் வீட்டில் கிழக்குப் பக்கம் வாசல் இருக்கிறது என்று வைத்துக் கொள்வோம். இப்போது தெருவுக்கு நேராக இல்லாமல், வீட்டுக்கு வடக்கு திசையில் ஒரு வாசலை ஏற்படுத்தி, அதைப் பயன்படுத்தும்போது அந்தத் தெருக்குத்து நீங்கும்.

(பேசலாம்)

* படம் : ஸ்ரீஹரி

ருஷ்ணா

# கேளுங்கள் சொல்கிறேன்!

**நானும் என் தம்பியும் ஒரு நிலம் வாங்கி, இருவரும் சம பாகங்களாகப் பிரித்துக் கொண்டோம். என் வீட்டுக்குத் தென்புறத்தில் தம்பி வீடு இருக்கிறது. இரு வீட்டுக்கு மத்தியிலும் மதில் சுவர் கிடையாது. இதில் வாஸ்து தோஷம் இருக்கிறதா?**

**- பாவபாரதி, சென்னிமலை**

நிச்சயமாக வாஸ்து தோஷம் இருக்கிறது. அதிக உயரத்தில் இல்லாவிட்டாலும், இரண்டு நிலங்களுக்கு மத்தியில் மதில் சுவர் எழுப்புவது மிகவும் நல்லது. இது பல பிரச்னைகள் வருமுன் காக்கும்.

**எனக்கு இரண்டு வீடுகள் இருக்கின்றன. விடுமுறைக் காலங்களில் மட்டும் நாங்கள் குடும்பத்துடன் இன்னொரு வீட்டுக்குச் சென்று தங்குவோம். கடந்த முறை அங்கு சென்றபோது முன்புபோல் இல்லாமல் மனநிம்மதி குறைவாக இருந்தது. இதில் ஏதும் வாஸ்து குறைபாடு இருக்குமா?**

**- ரங்கநாதன், மதுராந்தகம்**

வாஸ்து குறைபாடு இருக்க வாய்ப்பிருக்கிறது. மகிழ்ச்சியாக இருக்க வேண்டும் என்பதற்காகவே விடுமுறைக் காலங்களில் செல்கிறீர்கள். அப்படியிருக்க, எந்த வகையிலான குறைபாடு என்பதை காலம் தாழ்த்தாமல், உங்கள் பகுதியில் இருக்கும் வாஸ்து ஜோதிடரை வரவழைத்து, சரிசெய்து கொள்ள வேண்டும். அதுதான் நல்லது.




# இரட்டை இலைக்கா உங்கள் வோட்டு?



**ச**ட்டசபை தேர்தல் நேரம் பார்த்து இரண்டு புத்தகங்கள் வெளியாகியிருக்கின்றன. ஒன்று வாஸந்தியின் ஆங்கிலப் புத்தகம், 'Cut out, caste and film stars : world of Tamil Politics'. இன்னொன்று காங்கிரஸ் கட்சிப் பிரமுகரான கோபண்ணா எழுதியது, 'அராஜக ஆட்சியை அகற்றுவோம்'

'புத்தகத்துக்கு இந்தப் பெயரை எப்படித் தேர்ந்தெடுத்தீர்கள்?' என்று எழுத்தாளர் வாஸந்தியைக் கேட்டால், "கட் அவுட், ஜாதி மற்றும் சினிமா நட்சத்திரங்களுக்கு தமிழக அரசியலில் என்றைக்குமே முக்கியத்துவம் உண்டல்லவா? எனவேதான் தமிழ்நாட்டின் அரசியல் வரலாற்றைச் சொல்லும் இந்த ஆங்கிலப் புத்தகத்துக்கு அப்படியொரு தலைப்பை வைத்தேன்'' என்றவர், "பத்தாண்டு கால இந்தியா டுடே (தமிழ்) ஆசிரியர் பொறுப்பு எனக்கு நிறைய அரசியல் ஆர்வத்தை ஏற்படுத்தியது. தமிழகத்தில் பத்திரிகை என்றாலே இரண்டு நேரெதிர் முகாம்களில் ஒன்றைச் சார்ந்தவராக இருக்க வேண்டும் என்ற மரபினை மீறி, நான் அனைவரையும் சமமாகப் பார்த்தேன். நடுநிலையுடன் விமர்சனம் செய்தேன். அதனால் நான் சந்தித்த அனுபவங்கள் ஏராளம். தமிழ்நாட்டு அரசியல் குறித்து பெங்குயின் நிறுவனம் என்னை ஒரு புத்தகம் எழுதும்படிக் கேட்டபோது, அந்த அனுபவங்கள்தான் என்னை இந்தப் பணியினை ஏற்க வைத்தவ'' என்றார் நெகிழ்ச்சியோடு.

**கோ**பண்ணாவின் புத்தகத்தில் ஜெயலலிதாவின் ஐந்தாண்டு கால ஆட்சி குறித்த கடுமையான, ஆனால் ஆதாரபூர்வமான விமர்சனம் இடம்பெற்றுள்ளது. ஜெயலலிதா முதல்வரானவுடன் செய்வதாக வாக்குறுதியளித்த, ஆனால் செய்யத் தவறிய விஷயங்களின் நீண்ட பட்டியல் இந்தப் புத்தகத்தில் இடம்பெற்றுள்ளது. சட்டமன்றத்தில் நடந்த ஜனநாயகப் படுகொலைகள், அரசு ஊழியர்களை அம்மா 'தாயுள்ளத்துடன்' நடத்தியது, ஊழல் அரசியல், பழிவாங்கும் படலம், தேர்தல் ஆணையத்தைக் கொச்சைப்படுத்திடும் விமர்சனங்கள் என்று ஏராளமான விஷயங்கள் குறித்த புள்ளி விவரங்களுடன், ஆணித்தரமாக, ஏன் ஜெயலலிதா ஆட்சி அகற்றப்பட வேண்டும் என்று விளாசித் தள்ளியிருக்கிறார் கோபண்ணா. புத்தகத்தை படிக்கும் எவரையும் 'இரட்டை இலைக்கு வோட்டுப்போட வேண்டுமா?' என்று யோசிக்க வைக்கும் புத்தகம்.

- எஸ்.சந்திரமௌலி

பறவைக் காய்ச்சலுக்கு நிகராக இன்னொரு காய்ச்சல் உலகையே உலுக்கிக் கொண்டிருக்கிறது. ஜெர்மனியில் ஜூன் ஒன்பது முதல் ஜூலை ஒன்பது வரை நடக்கவிருக்கும் உலகக் கோப்பை கால் பந்து போட்டிதான் அது.

புதிதாகச் சுண்ணாம்பு அடித்துத் தயார் நிலையில் உள்ள பன்னிரண்டு ஸ்டேடியங்கள்; அதில் அறுபத்து நான்கு மேட்சுகள்; அவற்றைக் கண்டுகளிக்கவிருக்கும் நாற்பது லட்சம் ரசிகர்கள் என ஜூன், ஜூலை மாதங்களில் மூன்றாம் உலகப் போரே நடந்தாலும் ஃபுட்பால் ரசிகர்களுக்கு ஊன், உறக்கம் எல்லாம் உலகக் கோப்பை ஆட்டங்கள்தான். 1930-ல் முதல் உலகக் கோப்பை போட்டி நடந்தபோது சாம்பியன் பட்டத்தை தட்டிச் சென்றது உருகுவே அணி. அதன் பின்பு பிரேஸிலின் ஆட்டம்தான் எடுபட்டிருக்கிறது. ஏற்கெனவே ஐந்து முறை உலகக் கோப்பை பட்டம் வென்ற பிரேஸில், இந்த முறை சற்றுத் தடுமாற வாய்ப்பிருக்கிறது. அதன் ஸ்டார் வீரர்களான ரொனால்டோ, அட்ரியனோ, ராபர்டோ கார்லோஸ் போன்றோருக்கு நேரம் சரியில்லை. சமீபகாலமாக கோல் போஸ்டுக்கு வெளியே கோல் அடிக்கிறார்கள்.



# கால்பந்து காய்ச்சல்!



கால்பந்து ஆட்டத்தின் பிதாமகனான பீலே ஆடிய நான்கு உலகக் கோப்பை ஆட்டங்களில் பிரேஸில் மூன்று முறை வென்றுள்ளது. அர்ஜென்டினாவின் மாரடோனாதான் 86-ம் ஆண்டு உலகக் கோப்பையின் சூப்பர் ஸ்டார். அப்போது ஒற்றை ஆளாக இங்கிலாந்து வீரர்களைக் கடந்து அவர் அடித்த கோல்தான் இன்றைக்கும் சிறந்த கோலாக மெச்சப்படுகிறது.

கிரிக்கெட்டில் 'மேன் ஆஃப் தி சீரிஸ்' மாதிரி உலகக் கோப்பை கால் பந்து போட்டியிலும் சிறந்த வீரருக்கான பரிசுண்டு. பளபளக்கும் தங்கப் பந்து. 1986-ல் மாரடோனாவும் 98-ல் பிரேஸிலின் ரொனால்டோவும் இந்தப் பந்தை வாங்கியிருக்கிறார்கள். அதேபோல அதிக கோல் அடித்த வீரர்களுக்கு தங்கத்திலான ஷூ வழங்கப்படும். ஃபிரான்ஸ் வீரர் போண்டைன் 1958-ல் அடித்த 14 கோல்களின் சாதனை இன்னமும் முறியடிக்கப்படவில்லை.

2006-ம் வருட உலகக் கோப்பையை பிரேஸில், ஜெர்மனி, இங்கிலாந்து, ஃபிரான்ஸ், அர்ஜென்டினா அணிகளுள் ஒன்று கைப்பற்ற வாய்ப்புள்ளது. ஒரே வருத்தம், கோஸ்டா ரிட்டா, டிரினேட் & டொபேக்கோ, அங்கோலா, கானா என்று துக்கடா நாடுகளெல்லாம் உலகக் கோப்பை கால்பந்து போட்டிக்குத் தகுதி பெற்றுள்ளன. ஆனால் இந்தியாதான் இன்னமும் காலாட்டிக் கொண்டிருக்கிறது.

- செந்தில்

# தெற்கு மண்டலம்

## அம்மாவின் ஆண்டிப்பட்டி!

ஸ்டார் தொகுதியான ஆண்டிப்பட்டியில் முதல்வர் ஜெயலலிதாவை எதிர்த்து நிற்கும் தி.மு.க. வேட்பாளர் சீமான். தேர்தல் களம் அவருக்கு முற்றிலும் புதியது. ஆனால், தொகுதி மக்களிடம் வாக்கு சேகரிக்கும் அணுகுமுறையில் தேர்ச்சி பெற்ற வேட்பாளரின் 'சென்டிமெண்ட் டச்' இழையோடுகிறது. முதல்வர் போட்டியிடும் தொகுதியில் ஒரு லட்சத்து எண்பத்திரண்டாயிரம் வாக்காளர்கள். ஆண்களைவிடப் பெண்கள் ஏழாயிரம் அதிகம் என்பது குறிப்பிடத்தக்கது.

"ரெண்டு வருஷத்துக்கு முன்னாடி எம்.பி. எலெக்ஷனப்போ ஆண்டிபட்டிக்கு கலைஞர் வந்துட்டுப் போனாரு. அப்பக்கூட ஆண்டிப்பட்டியில அவ்வளவு கூட்டம்! அம்மாவுக்கு வந்ததைவிட அய்யாவுக்கு



* சந்தானம்



* கார்த்திகேயன்

ஆண்டிப்பட்டியில வந்த கூட்டம் ரொம்ப அதிகம்!" என்றார் போட்டோவுக்கு மறுத்துவிட்ட தரைக்கடை வியாபாரி ஒருவர்.

"கலைஞருக்குக் கூட்டம் கூடும்ங்க. அத்தினி ஜனங்களும் வோட்டுப் போட்டு வாங்களா? அவுருக்கு இன்னிக்கி நேத்தா கூட்டம் கூடுது. அம்பது அறுவது வருஷமாத்தான் அவரு பேச்சைக் கேக்க கும்பல் திரளுது. அப்படிப் பார்த்தா அம்பது அறுவது வருஷமா அவரு தானே தொடர்ந்து ஆட்சியில இருந்திருக்கணும்? ஆண்டிப்பட்டியைப் பொறுத்தவரைக்கும் முக்கால்வாசி வோட்டு ரெட்டை எலைக்குத்தாங்க. எழுதி வெச்சிக்குங்க!" என்றார் ஆண்டிப்பட்டி, புள்ளப்புர சந்தில் வசித்து வரும் சின்னத்தாயி.

* சீமான்





* ஜெயலலிதா

"இந்தத் தொகுதியில நாற்பதாயிரம் வோட்டு அதிகம் வாங்கி ஜெயிக்க இருந்தவர் ஜெயலலிதா. கலைஞர் விசிட், சீமானின் வாக்கு சேகரிக்கும் யுக்திகளால இப்ப நாலாயிரம் வோட்டுலயாவது ஜெயலலிதா ஜெயிப்பாரான்னு சந்தேகமா இருக்கு!" என்கிறார் அம்மச்சியாபுரம் கிராமத்தின் அய்யனார்.

தங்களது கட்சியின் தலைவிக்காக, மாநிலங்களவை உறுப்பினர்களான

# ஜெயிக்கப் போவது யார்?

டி.டி.வி. தினகரனும், தங்க தமிழ்ச்செல்வனும் தொகுதியின் அனைத்து கிராமங்களுக்கும் சென்று வாக்குகள் சேகரித்து வருகின்றனர். தி.மு.க. வேட்பாளர் சீமானுக்கு பக்கபலமாக மு.க.அழகிரி, பொன். முத்துராமலிங்கம் ஆகியோர் தொகுதிக்குள் சென்று வருகின்றனர். ஜெயலலிதா பெற இருக்கும் பெருவாரியான வாக்குகள் வித்தியாசத்தை, தி.மு.க.வின் புதிய வேட்பாளர் படிப்படியாகக் குறைத்துக் கொண்டே வருவதுதான் லேட்டஸ்ட் நிலவரம்!

## 'ஓ' போடும் பன்னீர்!

தமிழகத்தின் ஆறு மாத கால முன்னாள் முதல்வர். மாநில அமைச்சரவையில் நம்பர் டூ. கட்சியின் கடைசித் தொண்டனிடம்கூட ஒட்டிக் கொண்டிருக்கும் பந்தா இவரிடம் கிடையாது. பன்னீர்செல்வம், பொதுப்பணித்துறை அமைச்சர். அதனாலோ என்னவோ தேனி மாவட்டத்தின் போக்குவரத்துச் சாலைகள் அத்தனையும் பளிச். பெரியகுளம் சட்டமன்ற தொகுதியில் அ.தி.மு.க. வேட்பாளராக மீண்டும் போட்டியிடுகிறார் பன்னீர். தி.மு.க. வேட்பாளராக எதிர்த்து நிற்பவர் தேனி மாவட்ட தி.மு.க. செயலாளர் எல். மூக்கையா. இவர் பெரியகுளம் தொகுதியின் முன்னாள் எம்.எல்.ஏ.



• பன்னீர் செல்வம்

பெரியகுளம் சட்டமன்ற தொகுதியில் சுமார் இரண்டு லட்சம் வாக்காளர்கள். அவர்களில் பதினைந்து சதம் இஸ்லாமியர்கள். 2001 தேர்தலில் பதினெட்டாயிரம் வாக்குகள் வித்தியாசத்தில் வெற்றி பெற்றார் பன்னீர்.

''பெரியகுளத்துல அம்பது வருஷமா கோயில் தேரு ஓடாம இருந்திச்சு. அது பழுதடைஞ்சும் போயிடுச்சு. இருபத்தைஞ்சு லட்ச ரூபா செலவுல புதுசா தேர் ஒண்ணு செய்யப்பட்டு எங்க அமைச்சர் முயற்சியாலதான் போன பங்குனி உத்திரத்துல தேர் ஓடுச்சி. பெரியகுளத்துக்குப் பக்கத்துல லெட்சுமிபுரம் பகுதியில மாவட்ட நீதிமன்றம் கொண்டு வந்தவரு எங்க எம்.எல்.ஏ. அவரு முதல்வரா இருந்தப்பவும் சரி, மந்திரியா இருந்தப்பவும் சரி, சனி - ஞாயிறுகள்ல அவரைத் தொகுதிக்குள்ளார பார்த்துடலாம்!'' எனப் பட்டிய விடுகிறார் லெட்சுமிபுரம் ஏரியாவாசி கார்த்திகேயன்.

''கொடைக்கானல் மலையடிவாரத்துல 'பச்சிலை நாச்சியப்பன்' அணை கட்டி முடிச்சவரு எங்க தொகுதி எம்.எல்.ஏ. அறுபது கோடி ரூபாய்

• அய்யனார்



• சின்னத்தாயி



திட்டம் அது. அதனால இப்ப சுமார் ஐந்நூறு ஏக்கர் பாசன வசதி பெறுது. ஜி. கல்லுப்பட்டி, ஜிங்குவார்பட்டி, பாலப்பட்டி, மீனாட்சிபுரம், பரசுராமபுரம், தும்மலப்பட்டி போன்ற பல கிராமங்கள் அந்த அணையினால பயனடைஞ்சு வருது. அதனால எங்க ஏரியா வோட்டு பன்னீர் அண்ணனுக்குத்தான்!'' என்று உரிமையுடன் கூறுகிறார் ஜி. கல்லுப்பட்டி கிராமத்தின் சந்தானம். பெரியகுளம் டு கொடைக்கானல் புதிய வழித்தடம்

## நெருக்கடியில் நெல்லை!

நெல்லை சட்டமன்ற தொகுதியில் சுமார் இரண்டு லட்சம் வாக்காளர்கள். இதில் சைவப் பிள்ளைமார் இருபத்தைந்து சதம். தொகுதி வேட்பாளரின் வெற்றியை பெரும்பான்மை சைவப் பிள்ளைமார் வாக்குகளே நிர்ணயிப்பதாகக் கூறப்படுகிறது. மாநில அரசின் தொழில்துறை அமைச்சரான நயினார் நாகேந்திரன்தான் மீண்டும் அ.தி.மு.க. வேட்பாளர். அவரை எதிர்த்துப் போட்டியிடுபவர் தி.மு.க. வேட்பாளர் என். மாலை ராஜா. நெல்லை தி.மு.க. நகரச் செயலாளர். தேர்தல் களத்தில் புதுமுகம். ஆனால், கழக உடன்பிறப்புகளின் திட்டமிட்ட தேர்தல் பணிகளால் ரத்தத்தின் ரத்தங்களையும் சுறுசுறுப்பாக்கி விட்டிருக்கிறார்.



✱ தளவாய் சுந்தரம்



✱ நயினார் நாகேந்திரன்



✱ சுரேஷ் ராஜன்

''சிட்டிங் எம்.எல்.ஏ., அமைச்சர் என்கிற வகையில் தொகுதிக்கு நிறையவே செய்திருக்கிறார். ஒவ்வொரு தொகுதியிலும் சொல்லப்பட்டு வரும் சாலை வசதி, மின் விளக்கு வசதி நெல்லை தொகுதியில் எங்கும் கொண்டு வரப்பட்டுள்ளது. எனவே எனது வோட்டு அமைச்சருக்கே!'' என்கிறார் மாநகராட்சியின் மூன்றாவது வார்டில் வசித்து வரும் செல்லையா.

''எங்க தொகுதி எம்எல்ஏ., வெறும் அமைச்சர் இல்லீங்க. தொழில்துறை அமைச்சர். இவரு பீரியட்லதான் நெல்லை பேட்டை ஏரியாவுல தென்னிந்திய கூட்டுறவு நூற்பாலை இழுத்து மூடப்பட்டது. அது மட்டுமா? தனியார் நூற்பாலைகள் நான்கும் மூடப்பட்டன. சுமார் பத்தாயிரம் தொழிலாளர்கள் வேலை இழந்தனர். மூடப்பட்ட நூற்பாலைகளைத் திறந்து வைக்க அமைச்சர் எந்த

அமைச்சரின் சாதனைகளில் ஒன்று எனவும் குறிப்பிடப்படுகிறது.

தொகுதிக்குள் வாக்கு சேகரிப்பில் மிகவும் பின்தங்கியுள்ளது தி.மு.க. அமைச்சர் தொகுதிக்குள் அதிமுகவின் தேர்தல் வேலைகள் படு சுறுசுறுப்பு. தொகுதி வாக்காளர்களிடையே பன்னீர்செல்வம் சேமித்து வைத்திருக்கும் செல்வாக்கு, அவரை பெரும் வாக்குகள் வித்தியாசத்தில் வெற்றிபெற வைத்துவிடும் என்றே தோன்றுகிறது.

# ஜெயிக்கப் போவது யார்?

முயற்சியும் செய்யவில்லை!" எனக் குறைபட்டுக் கொள்கிறார் பேட்டை ஏரியாவில் வசித்துவரும் ஜான் போஸ்கோ.

நெல்லையைப் பொறுத்தவரை தி.மு.க., அ.தி.மு.க. இரண்டும் சம பலத்தில் மோதிக் கொண்டிருக்கின்றன. வெற்றி மாலை அமைச்சருக்கா அல்லது தி.மு.க.வின் மாலைராஜாவுக்கா என்கிற மயக்கத்தில் இருக்கிறது அல்வாவுக்குப் பேர் போன திருநெல்வேலி.



• பத்திநாதன்



• ஜான்போஸ்கோ

## தப்பி விடுவாரா தளவாய் சுந்தரம்?

கன்னியாகுமரி. இங்கு போட்டியிடுபவர்களில் ஒருவர் இந்நாள் அமைச்சர், இன்னொருவர் முன்னாள் அமைச்சர். அ.தி.மு.க. வேட்பாளர் தளவாய் சுந்தரம். தி.மு.க. வேட்பாளர் சுரேஷ் ராஜன். இருவருமே அவரவர் கட்சியின் ஆட்சிக் காலங்களில் தொகுதிக்கு நிறையவே செய்துள்ளார்கள் என்று தொகுதிவாசிகள் பிராக்ரஸ் ரிப்போர்ட் காட்டுகிறார்கள். தி.மு.க.-அ.தி.மு.க. என மாறி மாறி வெற்றி மாலை சூடும் தொகுதி. ஒரு லட்சத்து எண்பத்தெட்டாயிரம் வாக்காளர்கள்.

அ.தி.மு.க. ஆட்சிக் காலத்தில் கன்னியாகுமரி தொகுதிக்கு மட்டும் சுமார் நானூற்று அறுபது கோடி ரூபாய் நலத் திட்டப் பணிகள் நிறைவேற்றப்பட்டிருப்பதாகக் கூறப்படுகிறது. "மீனவர்களின் எழுபது சதவிகித வோட்டு அ.தி.மு.க.வுக்கே" என்கிறார்கள். 'தொகுதியின் ஏனைய பகுதிகளில் இரு வேட்பாளர்களும் சம அளவில் வாக்குகள் பெற்றாலும் மீனவ மக்களின் வோட்டு தளவாய் சுந்தரத்தை வெற்றி பெற வைத்துவிடும்!" என்கிறார் கன்னியாகுமரி விசைப்படகு சங்கத்தின் முன்னாள் தலைவர் பத்திநாதன்.

"ரெண்டு ரூபாய்க்கு அரிசி தர்றேன்னு கலைஞர் சொன்னதுக்கப்புறமாத்தான், ஜெயலலிதா மாசம் பத்து கிலோ அரிசி இலவசமா தர்றேன்னு சொன்னாங்க. இந்தம்மா ஆட்சி செஞ்ச அஞ்சு வருஷத்துல அந்த பத்துகிலோ அரிசி தந்திருக்கலாமா இல்லியா? எங்களோட வோட்டு உதயசூரியனுக்கே!" எனக் கூறுகிறார் சின்ன முட்டம் கிராமத்தின் கனகம்.

இந்நாள் அமைச்சரும், முன்னாள் அமைச்சரும் சம பலத்துடன் மோதிய போதிலும், நூலிழையில் தப்பி விடுவார் தளவாய் சுந்தரம் என்பதே கன்னியாகுமரி பகுதி மீனவ வாக்காளர்களின் கருத்து.

• செல்லையா



• கனகம்



- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

ஆடித் தபசுக்குப் புறப்பட்ட முத்தம்மா கிழவி, ஊருக்கு மேற்கே ஒரு பர்லாங் தூரத்தில் உள்ள பேருந்து நிறுத்தத்தை நோக்கி வேகமாக நடந்து வந்து சேர்ந்தாள். அங்கும் பதினைந்து பேருக்கு மேல் நின்றார்கள். அதில் அம்மாசியும் அவனது மனைவியும் இருந்தார்கள்.

"ஏலே அம்மாசி, ஓம் பொண்டாட்டியோட இங்கயாடா இருக்க. உன்னோட ஆத்தா, 'எம் மருமவ புள்ளைத்தாச்சிக்காரி, நீதான் வருஷா வருஷம் கோயிலுக்குப் போறியே, அவ கூடவே போயிட்டு, கூடவே வா'ன்னு உனக்கு



முன்னாடிதானடா சொன்னா. என்னை விட்டுட்டு வந்திட்ட. அறிவு கெட்ட பயலே" என்றாள் கிழவி.

"பாட்டி, நாங்க வரும்போது வீடு பூட்டிக் கிடந்துச்சு. போயிட்டேன்னு நினைச்சு வந்திட்டோம்" என்று புளுகினான் அம்மாசி.

"வீட்ட அடைச்சிட்டு இப்பத்தானடா வாரேன். மில்லுல மாதச் சம்பளம் வாங்குற பவுசு உனக்கு. இந்தக் கிழவிய மதிக்கவா போற."

'பொல்லாத கிழவி. எதுக்கோ அடிப் பின்றது. முத்தம்மா கிழவி பின்பக்க வாசல் வழியாக ஏறுவதைக் கண்ட அம்மாசி, தன் மனைவியோடு ஓடிப்போய் முன்பக்கம் ஏறிக்கொண்டான். பேருந்து நின்றவுடன் இறங்கிய அம்மாசி யும் அவன் மனைவியும் கிழவி கண்ணில் படக்கூடாதென்று வேகமாக நடந்தார்கள். அவளும் விடவில்லை. "ஏலே அம்மாசி நில்லுடா. நானும் சேர்ந்து வாரேன்."

'சே... கிழவி பெரிய கழுத்தறுப்பால்ல இருக்கா... விடமாட்டேங்காளே...'

மூன்று பேரும் நடந்தார்கள். இவளை

# பத்து ரூபாய் பந்தம்!

எப்படி வெட்டி விடலாம் என்ற யோசனையிலேயே அம்மாசி இருந்தான். 'வேற எதைச் சொன்னாலும் கூட வந்தாலும் வந்திருவா. இதுதான் வழி' என்று நினைத்தவன், "பாட்டி, இவளுக்கு ஒரு டானிக் வாங்கணும். நீ கோயிலுக்குப் போ. பின்னாலே வந்திருதோம்."

"சரிப்பா, புள்ளைத்தாச்சிக்காரி... கூட்டத்துல பாத்து வாங்க" என்றவள் கொஞ்சம் நடையைக் கூட்டினாள். அவள் தலை மறைந்தவுடன் இரண்டு பேரும் பகல் காட்சி திரைப்படத்துக்கு ஓடினார்கள்.

பதினொரு மணிக்குக் கோயிலுக்குள் சென்ற கிழவி, இருக்கிற சாமி ஒன்றுவிடாமல் கும்பிட்டாள். பிரகாரங்களைச் சுற்றினாள். கோமதி அம்பாள் தங்கச் சப்பரத்தில் எழுந்தருளி ஊர்வலம் புறப்பட்ட உடன் பின்னாலேயே வந்தாள். தபசு மண்டபத்துக்கு வந்தது. அங்கு சுவாமியைக் காண வேண்டி ஒற்றைக் காலில் தவம் இருந்த கோமதி அம்பாளுக்கு அபிஷேக அலங்காரம் நடந்ததைக் கண்டு உள்ள மகிழ்ச்சியோடு கடை வீதிக்கு வந்து திரும்பும்போது மணி

போடுதா. பஸ்ல விட்டு இறங்கின உடனே ஏதாவது காரணத்தைச் சொல்லிக் கழட்டி விட்டுடணும். இல்லைன்னா இவ செலவுக்கும் நாழ முழம் போட வேண்டியிருக்கும்' என்று நினைத்துக் கொண்டான்.

அந்த இடத்தில் கொஞ்ச நேரம் அமைதி நிலவியது. அதை உடைத்து வாயைத் திறந்தாள் கிழவி.

"என்னப்பா பஸ்சு எப்ப வரும் தபசுக்குன்னு கூட நாலு வுட்டுருப்பாங்களே. எனக்குக் கல்யாண மானதில இருந்து ரெண்டு பேரும் தபசுக்கோ? மாதாந்தர வெள்ளிக்கோ நடந்தேதாம் போவோம். இந்த ஒம்பது மைலு போறதுக்கு இப்பக் காத்துக் கிடக்க வேண்டியிருக்கு. காலம் மாறுறதப் பாரேன்."

"சுயபுராணத்தை ஆரம்பிச்சுட்டா விடமாட்டாளே கிழவி" என்றான் ஒருவன்.

அந்த நேரத்தில் பேருந்தும் வந்து

**வீரசிகாமணி ஆதினமிளகி**

நாலரை இருக்கும்.

பெருங்கூட்டத்தைச் சுமந்து கொண்டு புறப்படத் தயாராய் நின்ற பேருந்தில் முட்டி மோதிப் புகுந்து உள்ளே போய் நின்றாள் கிழவி.

இரண்டு கிலோ மீட்டர் தூரம் வந்த பின் நிறுத்தி கண்டக்டர் டிக்கெட் போட்டான். சிலபேர் இறங்கிக் காற்றாட நின்றார்கள். முன்பகுதியில் இருந்த அம்மாசியிடம், டிக்கெட் கேட்டான் கண்டக்டர்.

'ரெண்டு பருவக்குடி கொடுங்க' என்றபடி பைக்குள் கையை விட்டவன் திடுக்கிட்டான். "ஐயோ என் பர்ஸைக் காணும் சார், எவனோ அடிச்சிட்டான்."

"யோ... என்ன விளையாட்டா... ரெண்டு கிழிச்சாச்சு... தெரிஞ்சவங்க இருந்தா வாங்கிக்கொடு. இல்லைன்னா எறங்குய்யா. என்ன, எங்க அப்பன் வீட்டு பஸ்ஸா? வந்து ஒக்காந்திட்டாங்க."

கண்டக்டர் போட்ட சத்தத்தில் கூட்டம் நிசப்தமானது.

"சார், கொஞ்சம் பொறுத்துக்கோங்க. ஊருல இறங்கின உடனே அஞ்சு நிமிஷத்தில வாங்கித் தாரேன். என் மனைவி புள்ளைத்தாச்சிக்காரி. இந்த நடுக்காட்டுல விட்டுறாதீங்க."

பின்னால் நின்ற கிழவிக்கு, அம்மாசி சத்தம் பிடிபட்டது. "ஏலே அம்மாசி, என்னடா வாக்குவாதம் பண்ணிக்கிட்டிருக்க..."

அவனுக்கு கிழவி குரலைக் கேட்டவுடன் 'போன உயிர் திரும்பி வந்தது போல இருந்தது. "பத்து ரூபாய் இருந்தா கொடு பாட்டி..."

"இக்கட்டுக்குத்தானடா... அவனைப் பின்னால வரச் சொல்லு. சேத்து எடுக்கேன்."

பேருந்து புறப்பட்டது. ஊர் வந்த உடன் மூன்று பேரும் இறங்கினார்கள்.

"பாட்டி நீ இன்னக்கி இல்லன்னா என் மானம் மரியாதையெல்லாம் போயி காட்டுக்குள்ள நடு ரோட்ல நின்னிருப்போம். ஆயிரம் ரூபாய்க்கு மேலேயே இருக்கும். எவனோ அடிச்சிட்டான். நான் செஞ்ச தப்புக்குச் சரியான தண்டனை தாம் பாட்டி..."

"என்னடா அப்படி பொல்லாத தப்பைச் செஞ்சிட்ட...."

"எங்கள விரும்பிக் கூடவந்த உனக்கும் செலவு போடணுமேன்னு விலகி விலகிப் போனோம் பாரு. இதுவும் வேணும்... இன்னமும் வேணும்..."

"போடா போ... நீ இந்த ஊர்லயே இருந்துக்கிட்டு என்னைப்பத்தித் தெரிஞ்சுக்கிட்டது இவ்வளவுதான். நான் நாலு ஆம்பள, மூணு பொம்பளயப் பெத்தவ. இங்கேயே நல்லாத்தான் பிழைக்காங்க. அவங்ககிட்ட இதுவரைக்கும் ஒரு வாய் சோத்துக்குப் போயி நின்னிருப்பனா. எனக்கும் எழுபது வயசாகப் போவுது. பூர்வீகத்துப் பழைய வீடு இருக்கு. அதுல தனியாத்தான் இருக்கேன். தினம் காட்டு வேலைக்குப் போறேன். நாப்பது ரூபா கிடைக்கும். வாய்க்கு ருசியா நானே சமைச்சுக்கிடுவேன். யாரும் பசின்னு வந்தா எனக்கு இல்லாட்டாலும் சோறு கொடுத்திருவேன். ராசாவுக்குக் கூட கவலை இருக்கும். எனக்கு அதெல்லாம் கிடையாது. மக வீட்டுக்குப் போனாலும் தன்னைப் பேணித்தாண்டா நான் போவேன். சரி சரி கவலைப்படாத. களவு போனதைப்பத்தி ஒன் ஆத்தாட்ட சொல்லாத. நடுத் தெருவில நின்னு ஆடித் தொலைச்சிருவா."



"அஞ்சு வருஷத்துக்கப்புறமா தொகுதிப் பக்கம் போக வேணாம்னு சொன்னேன். கேட்காமல் போயிட்டாரு!"

"அதுக்கு இப்ப என்னய்யா?"

"தலைவரை தொகுதி மக்கள் இப்ப பிணையக் கைதியா பிடிச்சு வைச்சுருக்காங்க..."

– வெ. ராம்குமார்



"அந்தக் கட்சிக்கு உளவுத்துறை ரொம்ப உதவுது போலிருக்கு."

"எப்படிச் சொல்ற?"

"அந்தக் கட்சித் தலைவர் மேடையில 'உளவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்'னு பேசுறாரே!"

- விஷ்ணுகுமார்



"இந்தத் தொகுதியில எத்தனை வாக்காளர்கள்?"

"முக்கால் வாசிப்பேர் ஒரு வோட்டுக்கு ஐநூறு போதும்ங்கற ரகம். கால்வாசி ஆயிரம் எதிர்பார்க்குற ரகம்!"

- அம்பை தேவா



"தேர்தல் பிரசாரக் கூட்ட மைக் செட்டுக்கு எவ்வளவு கொடுக்கணும்?"

"பணமெல்லாம் இருக்கட்டும், உங்க பேச்சையெல்லாம் கேட்கச் சொல்லி என்னைக் கட்டாயப்படுத்தக் கூடாது..!"

- நெ.இராமன்



"தலைவர் தன்னோட தொகுதியை தியாகம் பண்ணி கூட்டணிக் கட்சிக்குக் கொடுத்துட்டாரே?"

"அது தியாகம் இல்ல. சீட்டு கேட்டு வம்பு பண்ணின கூட்டணிக் கட்சியை பழிவாங்க இதைவிட்டா வேற வழி இல்ல!"

- அம்பை தேவா

## அன்பெனும் மழையிலே...

# மாதா அமிர்தானந்தமயி



# உண்மையை உணருங்கள்!

உலக வாழ்க்கையும், ஆன்மிகமும் மனித வாழ்க்கையின் இரண்டு மிக முக்கியமான அம்சங்கள். அவை மனமும், உடலும் போன்றவை. இரண்டும் வெவ்வேறானவை என்றாலும்கூட ஒன்றிலிருந்து மற்றொன்றைப் பிரித்துப் பார்க்க முடியாது.

இரண்டு விதமான கல்விகள் உண்டு. ஒன்று வாழ்க்கைக்கு வேண்டிய பணம் முதலான பொருட்களைச் சம்பாதிப்பதற்காகத் தேடிக்கொள்ளும், வேலை கிடைக்க உதவும் கல்வி. இந்தக் கல்வி பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் கற்பிக்கப்படுகிறது. மற்றொன்று வாழ்க்கைக்குத் தேவையான கல்வி. வாழ்க்கை அமைதியாகவும், நிம்மதியாகவும், ஆனந்தமாகவும் இருப்பதற்கு அவசியமான கல்வி. அதுதான் ஆன்மிகக் கல்வி. அதனை இந்த உலகில் பிறக்கும் ஒவ்வொருவரும் கட்டாயமாகப் படிக்க வேண்டும்.

ஓர் இயந்திரத்தைக் கடையில் வாங்குகிறபோது அத்துடன் அந்த இயந்திரம் என்னென்ன பாகங்களைக் கொண்டது, அதனை எப்படி இயக்குவது, அது பழுதடைந்தால் எப்படிச் சரிசெய்வது என்று எல்லா விவரங்களும் கொண்ட கையேடு ஒன்றைத் தருவார்கள். அந்த விவரக் கையேட்டினைப் படித்துவிட்டு, பின்னர் அந்த இயந்திரத்தை இயக்கினால் அது நன்றாக வேலை செய்யும். ஏதாவது பிரச்னை வந்தாலும், அந்தக் கையேட்டினை படித்துப் பார்த்து உடனே சரி செய்துவிடலாம். அதுபோல, இந்த வாழ்க்கையைப் பற்றிய கையேடு தான் ஆன்மிகம்.

முதல் தடவையாக ஒரு ஊருக்குப் பயணம் செல்கிறபோது, அந்த ஊருக்கான வரைபடத்தை வைத்துக்கொண்டு பயணம் செய்தால் சுலபமாக வழி கண்டு பிடித்து விடலாம். அதனால் பயணத்தின் போது இறுக்கம் தெரியாது. அதுபோலவே, ஆன்மிகம் என்கிற கல்வியைக் கற்றுக்கொண்டால், வாழ்க்கையின் எத்தகைய சிரமமான சூழ்நிலையிலும் மனம் சோர்ந்து போகாது. அவை வருமுன்னரே புரிந்துகொண்டு திறமையுடன் சமாளிக்க முடியும்.

நதியில் இறங்குவது, அதில் நீராடிவிட்டுக் கரையேறுவதற்குத்தான். நீரிலேயே நிரந்தரமாகத் தங்கிவிடுவதற்கு இல்லை. அதுபோலவே மனிதர்களுக்கு கிரஹஸ்தாசிரமம் என்று குறிப்பிடப்படும் திருமண வாழ்க்கை, இறைவனை அடைவதற்காக நாம் பயணம் செய்யவேண்டிய தடைகள் நிறைந்த பாதையில் உள்ள ஒரு படிக்கல் ஆகும். திருமண வாழ்க்கையை மேற்கொள்





பவர்கள் வாழ்க்கையின் உண்மையான லட்சியத்தைப் புரிந்துகொண்டு முன்னேறிச் செல்ல வேண்டுமேயொழிய ஆரம்பித்த இடத்திலேயே வாழ்க்கையை முடித்துவிடக் கூடாது. பற்றுகளிலிருந்து விடுபட்டு இறைவனை நோக்கிப் பயணம் செய்துகொண்டே இருக்க வேண்டும்.

இந்த உடலிலுள்ள ஒவ்வொரு திசுவும் மாறிக்கொண்டே இருக்கிறது. குழந்தைப் பருவம், வாலிபப் பருவம, மத்திய வயது, முதுமை என்று வாழ்க்கையின் நிலைகளும் தொடர்ந்து மாறிக்கொண்டே இருக்கின்றன. அப்படிப்பட்ட உடலை மெய் என்று நினைத்து, அதற்காகவே வாழ்ந்து, வாழ்க்கையை வீணாக்காதீர்கள் என்றுதான் அம்மா சொல்கிறேன்.

வைரம் விலை உயர்ந்ததுதான். மிகவும் அழகானதுதான். வைரத்தில் நகைகள் செய்து காதிலும், மூக்கிலும், கழுத்திலும், கைகளிலும் அணிந்துகொண்டால் நன்றாகத்தான் இருக்கும். அதற்காக அதைச் சாப்பிட்டு விடலாமா? வைரத்தைச் சாப்பிட்டால் சாக வேண்டியதுதான்.

என்னுடையது என்ற மனோபாவமே பற்று ஏற்படக் காரணமாகும். என் மனைவி, என் குழந்தை, என் தந்தை, என் தாய் என்று ஆரம்பித்து, நம் பற்றுக்கு அளவே கிடையாது. ஒன்றை யோசித்துப் பாருங்கள்... என் தந்தை, என் தாய், என் மனைவி, என் குழந்தை, என்றெல்லாம் நீங்கள் சொல்கிறீர்களே, அவர்கள் எல்லாம் உண்மையில் உங்களுக்கு உரியவர்களா? உங்களுக்கு உரியவர்கள் என்றால், அவர்கள் எப்போதும் உங்கள் கூடவே இருக்க வேண்டாமா?

நீங்கள் அவர்களுக்கு உரியவர்கள் என்றால், நீங்கள் எப்போதும் அவர்கள் கூடவே இருக்க வேண்டுமில்லையா? அப்படி இல்லாதபோது உண்மையான நிலை என்ன என்று உணர்ந்து கொள்ளுங்கள். இது உங்களுக்கு ஆன்மிக விழிப்புணர்வை ஏற்படுத்தும்.

இதற்காக, நீங்கள் உங்களுடைய பொறுப்புகளிலிருந்து உங்களை விடுவித்துக்கொள்ள வேண்டிய அவசியமில்லை. நீங்கள் செய்ய வேண்டிய கர்மங்களை, உங்களுடைய கடமையாக நினைத்து, சந்தோஷமாகச் செய்யுங்கள். அதேநேரத்தில், உங்களை எந்தவிதமான கட்டுப்பாடுகளுக்கும் உட்படுத்திக் கொள்ளாமல் கவனமாக இருங்கள்.

ஒருவன் நேர்முகத் தேர்வுக்குச் செல்கிறான். இன்னொருவன் வேலை கிடைத்து, முதல் நாள் வேலைக்குச் செல்கிறான். இருவரது மனோபாவங்களிலும் வித்தியாசம் இருக்கும். நேர்முகத் தேர்வுக்குச் செல்பவன், டென்ஷனாகக் காணப்படுவான். 'என்ன கேள்வி கேட்பார்களோ, அவற்றுக்கு எனக்குப் பதில் தெரிந்திருக்க வேண்டுமே, அப்படியே நன்றாகப் பதில் சொன்னாலும், எத்தனை பேர் நேர்முகத் தேர்வுக்கு வருவார்களோ, அத்தனை பேரில் நமக்கு வேலை கிடைக்குமா?' என்றெல்லாம் மனத்தில் ஒருவிதத் தவிப்பு இருக்கும்.

அதே நேரம் வேலையில் சேரப்போகிற வனுக்கு இதுபோன்ற தவிப்பு எதுவும் இருக்காது. வாழ்க்கையில் செட்டிலாகி விட்ட சந்தோஷத்தை அவன் முகத்தில் பார்க்கலாம்.

ஆன்மிகத்தை அறிந்து வாழ்பவர் களின் வாழ்க்கை, வேலையில் சேரப் போகிறவனின் மனநிலையைப் போன்றது தான். அவர்கள் வாழ்கையில் மன இறுக் கம் இருக்காது; மனத்தவிப்பு இருக்காது;

ஒருவருக்கு அவசரமாகச் செலவுக்குப் பணம் தேவைப்படுகிறது. தன்னுடைய நண்பனிடம் சென்று உதவி கேட்கலாம் என்று நினைக்கிறார். நண்பனைக் கேட்டால் பணம் கிடைக்கலாம்; ஒரு வேளை கிடைக்காமலும் போகலாம்; சில சமயம், நினைத்ததைவிட அதிகமாக உதவி கிடைக்கலாம். மறுபுறம் நண்பன், பணம் கொடுக்காமல் கடுமையாகப் பேசியும் அனுப்பிவிடலாம் அல்லது முன்பின் அறிமுகம் இல்லாதவனைப் போலவும் நடந்து கொள்ளக்கூடும்.

இதில் எதுவும் நடக்கக்கூடும் என்று முன்கூட்டியே சிந்தித்துப் பார்க்கிற வனுக்கு நண்பன் எப்படி நடந்து கொண் டாலும் வருத்தமும் ஏற்படாது; சந் தோஷமும் ஏற்படாது. காரணம், அவன் எதிர்பார்த்தவற்றுள் ஒன்றுதான் நடந் திருக்கிறது.

திடீரென்று ஒரு வெடி வெடித்தால், அது ஆளை உலுக்கிவிடும். அதே சம யம் வெடி வெடிக்கப்போகிறது என்று முன்கூட்டியே தெரிந்திருந்தால், அவ் வளவாகப் பயம் இருக்காது. உலகின் இயல்பு இதுதான் என்று அறிந்து கொண்டு வாழ்க்கை நடத்தினால், தேவை யில்லாத விஷயங்களால் மனம் சோர்ந்து போக அவசியமிருக்காது. அடுத்த முறை வெடிச் சத்தம் உங்கள் காதுகளில் கேட் கிறபோது, அதில் வாழ்க்கைக்கு ஒரு செய்தி இருக்கிறது என்பதை நினைவு படுத்திக் கொள்ளுங்கள்.

(அன்பு பெருகும்)



# அம்மா!

**சு**மார் இருபது வயதானபோது, சுதாமணிக்குத் திருமணம் செய்து வைத்துவிட வேண்டுமென அவரது பெற்றோர் நினைத்தனர். ஒருநாள் அவர்கள் வீட்டுக்கு அருகில் இருந்த ஒரு வீட்டுக்கு, சட்டை தைக்க அளவு எடுக்க வேண்டும் என்று சொல்லி சுதாமணியை அழைத்துச் சென்றனர். சுதாமணிக்கு உள்ளூர சந்தேகம் இருந் தாலும் அதை வெளிக்காட்டிக் கொள்ள வில்லை.

அந்த வீட்டுக்குப் போனதும், அந்த வீட்டுப் பெண்மணி, ஒரு செம்பில் தண்ணீரைக் கொடுத்து அடுத்த அறை யில் இருந்த இளைஞரிடம் அந்தத் தண்ணீர் செம்பைக் கொடுக்கச் சொன் னார். இது பெண் பார்க்கும் தந்திரம் என்று புரிந்துகொண்ட சுதாமணி, "நான் சட்டைக்கு அளவு எடுக்கத் தான் வந்தேனேயொழிய யாருக்கும் தண்ணீர் கொடுக்க வரவில்லை" என்று பட்டென்று சொல்லிவிட்டு அந்த வீட்டி லிருந்து வெளியேறிவிட்டார்.

அடுத்தடுத்து சுதாமணியைப் பார்க்க வரன்கள் வந்தபோதும் ஏறத்தாழ இதே அனுபவம்தான்.

- மௌலி

# குழந்தை...

"ஊர்க் குழந்தையை ஊட்டி வளர்த்தால் தன் குழந்தை தானே வளரும்" என்று நான் அடிக்கடி quote பண்ணித்தான் இருக்கிறேன். அதாவது உன் குழந்தையைப் பட்டினி போட்டுவிட்டாவது போய் ஊர்க் குழந்தையை ஸவரக்ஷணை பண்ணு என்று சொல்லித்தான் வந்திருக்கிறேன். அப்படிப் பழமொழி இருப்பதும் வாஸ்தவம். ஸத்யமாக இல்லாத ஒன்று பழமொழியாக ஆகிறதில்லை. ஆனால், இந்தப் பழமொழி ரொம்ப உசந்த நிலையில், தொண்டு மனப்பான்மையில் அப்படியே ஊறிப் போனவர்களைக் குறித்து ஏற்பட்டிருக்க வேண்டும். அவர்கள் மனஸறிந்து தன் குழந்தையைக் கதற விட்டுவிட்டு ஊர்க் குழந்தையைச் சீராட்டினார்களென்று அர்த்தமில்லை. பரோபகாரத்தில் அவர்களுக்குள்ள தீவிர உணர்ச்சிவேகம் அவர்களை இப்படி அடித்துக்கொண்டு போயிருக்கிறது. பக்தி வெறியில் ஒவ்வொரு நாயன்மார் லோக தர்மங்களுக்கு விரோதமாகக் கூடப் பண்ணவில்லையா? அப்படி இதுவும் ஒரு பரவச நிலையில் பண்ணுவது. அப்படி இவர்கள் தங்களுக்கு அதீதமான ஒரு சக்தியின் கீழ் ஊரிலே உள்ள அநாதைக் குழந்தைகளின் நலனுக்கே தங்களை அர்ப்பணம் பண்ணிக்கொண்டபோது, ஈச்வரப் பிரஸாதமாக வீட்டிலே இவர்களுடைய குழந்தைகள் கவனிப்பு இல்லாமலே (அல்லது ஈச்வரனின் கவனிப்பிலேயே) நன்றாக வளர்ந்திருக்கும். அதனால் இது ஸாதாரணமாக லோகத்திலிருக்கப்பட்டவர்களுக்கு 'எக்ஸாம்பிள்' ஆகாது.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்



அருள்வாக்கு



# செண்பகம்

நான்கு வாரத் தொடர்

"இது யாரு சொல்லு...?" - பின்னாலிருந்து கண்களைப் பொத்தினான் சத்யா.

சப்பாத்தி இடுவதை நிறுத்தாமல் பதில் சொன்னாள் நளினி. "எனக்குத் தெரியவே தெரியாது!"

"தெரியும்!"

"தெரியாது!"

"இல்லே, தெரியும்...."

"ஊஹூம் தெரியாது..."



"போதுமே! அம்மாவும் பிள்ளையும் ரொம்பத்தான் கொஞ்சிக்கறீங்க. கையை எடுடா சத்யா!" பதினேழு வயது பெண் புயல் அந்தச் சமையலறையில் மையம் கொண்டது.

அம்மாவை இறுக்கிக் கட்டி கன்னத்தில் முத்தமிட்டபடி தங்கையைப் பார்த்துப் பழித்துக் காட்டினான் - "எங்கம்மாவே!"

"இருக்கட்டுமே! அப்படியே இருக்கட்டுமே." அவள் அவனை நோக்கி முகத்தைக் கோணினாள்.

"உன்னைவிட ஏழு வயசு மூத்தவன். 'அண்ணா'ன்னு கூப்பிடணும், பேரைச் சொல்லாதேன்னு எத்தனை முறை சொல்றது நித்யா?" சொன்னபடியே சத்யாவிடமிருந்து தன்னை விடுவித்துக் கொள்ள முயன்றபோது...

இலேசாக செண்பகப்பூ வாசனை எழுந்தது...

மூச்சை ஒரு நிமிடம் இழுத்துப் பிடித்து வெளியேற்றினாள் நளினி. மெல்ல மீண்டும் உள்ளிழுக்க... மீண்டும் அந்தச் சுகந்தம். நினைவுச் சுழலின் விசையை இயக்கி, வலிக்க வலிக்க உணர்வுகளை உசுப்பும் மென் மலர் வாசம். தடுமாறிய உள்ளத்தை நிலைப்படுத்திக் கொண்டாள்.

சத்யாவிடமிருந்து செண்பகப்பூ வாசனை?

"என்ன சத்யா, ஏதாவது புது பர்ஃப்யூம் வாங்கியிருக்கியா?"

"இல்லையே."

"பின்னே, உன்கிட்டேயிருந்து அழகான வாசனை வருது..?"

"அது எங்கிட்டேயிருந்து வரலை... உன்னை இறுக்கிக் கட்டிக்கிட்டேனில்ல. அப்போ உன் மேலேருந்து எனக்கும் ஒட்டியிருக்கு. இ ஸ்மெல் அஃப் மை டிவைன் மதர்."

"அதென்னமா அழகான வாசனை? மணத்துக்கு ஏது அழகு?" கேட்டபடியே அம்மாவை வந்து தன் பங்கிற்கு

# சீதா ரவி

அணைத்து முகர்ந்தாள் நித்யா.

"ஹூம்! எனக்கு நல்ல தக்காளி - வெங்காய குர்மா வாசனைதான் வரது இவகிட்டே!" கன்னத்தில் கிள்ளி, தோளில் தட்டி, கைகளைப் பிடித்து உலுக்கி ஒரு சிறு அன்பு யுத்தம் நிகழ்த்தி விட்டு ஓடிவிட்டாள்.

'செண்பக சுகந்தத்துக்கு ஒரு வடிவழகு உண்டு மகளே...' சொல்லி விளக்குவதற்கு இது தருணமில்லை என்று எண்ணிக் கொண்டாள் நளினி.

"பசிக்குதும்மா" சத்யா கெஞ்சலாகச் சொல்ல, "அப்பா வரட்டும் கொஞ்சம் பொறு" என்றாள்.

"சரி" என்று கடந்து போனவனிட மிருந்து மீண்டும் அழுத்தமாக எழுந்தது செண்பக வாசனை. சென்ற கோணத்தில் அவன் சட்டைப் பை தெரிந்தது. அதனுள் அந்த நீண்ட மலரின் கூம்பிய இதழ் வடிவம் தெரிந்தும் தெரியாதது போல் தோன்றியது.

"சத்யா!"

தன் அறையை நோக்கிச் சென்றவன் நின்றான்.

"என்னம்மா?"

சற்றுமுன் முகத்தில் ததும்பிய குழந்தைத் தனம் எங்கே போயிற்று? 'இது யாரு சொல்லு?' என்று அவன் விளையாட்டாய்க் கண்பொத்தி எழுப்பிய கேள்விக்கு எளிதில் பதில் சொல்லிவிட முடியாது.

"ம்?" புருவங்களை உயர்த்தியபடி ஜாடையிலேயே 'என்ன?' என்று வினவி னான். ஓர் ஆணுக்கு மட்டுமே சாத்திய மான இறுக்கமும் மனப்பூட்டும் அவன் கண்களில் தெரிந்தன.

"ஒண்ணுமில்லே..." அவனை அனுப்பி விட்டாள்.

சந்தேகமொன்று சிந்தையில் உதித்த தற்காக வெட்கமாயிருந்தது. 'நம்ம பிள் ளையை நாம் நம்பாவிட்டால் யார் நம்பு வார்கள்?' ஒதுக்கித் தள்ளிய நெருஞ்சி முள்ளின் இடத்தில் அதனினும் ஹிம்சை யானதொரு நினைவு வந்து உட்கார்ந்தது. சந்தேகமும் செண்பகமும் ஏன் சேர்ந்து சேர்ந்து வரவேண்டும்? ஏதோ சித்து விளையாட்டு மாதிரி...'



**நா**ன்கு வருடங்களுக்குமுன், மூர்த்தி தனது சந்தேகத்தை வெளிப்படுத்திய தினத்தில் அவள் செண்பக மலர்களைத்தான் சூடியிருந்தாள். செண்டாகக் கட்டிய சரம். அதன் தெய்வீக சுகந்தம், அவளுக்குள் அமைதிகாத்த நல்லுணர்வுகளையெல்லாம் மேலெழச் செய்து, மேனிக்கும் இதயத்துக்கும் தனியொரு மென்மையைத் தந்திருந்தது. யாருக்கும் எதையும் செய்யத் தயாராய் இருக்கும் கனிந்த நிலையில் மனம் களித்தது. அன்பால் உலகை நிறைப்பதற்கே பிறந்தது போல் தோன்றியது. மூர்த்திக்காகக் காத்திருந்தாள்.

வந்ததுமே அவன் கேட்டான், "ரமேஷ் இன்னிக்கு வந்தானா?"

"ஆமாம்."

"நேத்திக்கு...?"

"நேத்திக்கும் வந்திருந்தார்."

"வருஷம் முந்நூற்றறுபத்தஞ்சு நாளும் வரணுமாக்கும்" - குரலில் ஆத்திரம் கனன்ற போதிலும் சொற்களின் உட்பொருள் உறைக்கவில்லை அவளுக்கு.

"இல்லையே... ஊர்ல இருந்தாத்தானே. முந்நூறு நாள் பாம்பே, டெல்லி, ஹைதராபாத்னு சுத்தறார்.... அது...."

"ஆஹா! அவன் அலையறானேன்னு எவ்வளவு கரிசனம்!"

சட்டென்று சொல்லடி விழுந்ததில் உள்ளே பொறி கலங்கியது. அச்சமும் அவநம்பிக்கையும் மாறி மாறி ஆட்கொள்ள அவனைப் பார்த்தாள்.

'எல்லார் மேலயும் இருக்கிற கரிசனம்தான்' என்று சொல்ல நினைத்த வார்த்தைகளை வெளிப்படுத்தாமல் காத்திருந்தாள். 'அவன் மனத்தில் உள்ளது முழுதும் வெளிவரட்டும்' என்று.

ஏதும் பேசாமல் அவன் உடை மாற்றப் போய்விட்டான். குழந்தைகள் வந்துவிட, அனைத்தும் சகஜமாய் இருப்பதாகக் காட்டிக்கொள்ள வேண்டியிருந்தது. என்ன செய்வதென்று புரியவில்லை. இரவு வரை காத்திருந்து, சிந்தித்துப் பேசத் தொடங்கும் முன் அவன் தூங்கிவிட்டான். எதுவுமே நடக்காததுபோல், இலேசாகக் குறட்டைவிடும் சப்தம். நடந்தது நிஜமா? கெட்ட கனவா?

பத்தொன்பது வருட மணவாழ்வில் சண்டைகள் வராமல் இல்லை. மூர்த்தி சராசரிக்கும் மேலான கோபக்காரன்தான். ஆனால் இதுவரையிலான சண்டைகள் இப்படி வலிக்கவில்லை. அவற்றுள் எதிலும் அவளது நேர்மை மீது களங்கம் விழவில்லை. எதிலும் இப்படி ஒரு மூன்றாம் மனிதனின் கண்ணியம் குலைக்கப்படவில்லை. எந்தச் சண்டையும் இன்றுபோல் தூக்கத்தைப் பிடுங்கி வைத்துக்கொண்டு பழித்துக் காட்டவில்லை.

மெல்ல அவனைத் தட்டி எழுப்ப முயன்றாள்.

"ஏங்க..."

குறட்டை நின்றது. திரும்பி, இரவு விளக்கின் வெளிச்சத்தில் அவள் முகம் பார்த்தான்.

"என்ன ஆச்சு உங்களுக்கு?"

"ஒண்ணுமில்லையே..."

"ஏன் சாயங்காலம்...." பேச முயன்ற அவள் இதழ்களுக்கு உரிமை மறுத்து ஆக்கிரமித்தான். இதுநாள்வரை அனுபவித்திராத ஒரு முரட்டு வலிமைக்கு அவள் கீழ்ப்படிய நேர்ந்தது. துவண்டு திரும்பிப் படுக்கையில் சூடியிருந்த செண்பகச் சரம் கசங்கி இதழ்கள் சிதறியிருந்தன.

**சொ**ல்லடிகள் எதிர்பாராத கணங்களில் தொடர்ந்தன.

குழந்தைகளிடம் மறைத்துச் சமாளிப்பது பெருமுயற்சியாக இருந்தது.

மணவாழ்வில் அளக்காமல் கொட்டிய அனைத்தையும் அள்ளியெடுத்து

"வோட்டுக் கேட்க வந்த வேட்பாளர் எங்க வீட்டுல அரைமணி நேரமும், எதிர் வீட்டுல அரை மணி நேரமும் இருந்தார்!"

"அவ்வளவு நேரம் என்ன செஞ்சார்?"

"எங்க வீட்டுல 'கோலங்கள்' சீரியலும், எதிர் வீட்டுல 'செல்வி' சீரியலும் பார்த்திட்டு இருந்தார்!"

**- நெல்லையப்பபுரம் செல்வன்**

அளந்து பார்க்க ஆரம்பித்தாள் நளினி. 'எப்படியெல்லாம் என்னைக் கொடுத்தேன்.' அத்தனையும் ஏற்று அனுபவித்துப் பகிர்ந்துகொண்டபின் சந்தேகம் ஏன் வந்தது...? மாய்ந்து மாய்ந்து சிந்தித்தும் விடை தெரியவில்லை.

கணக்கின்றிக் கொட்டியதையெல்லாம் கணக்குப் போட நேர்ந்ததில் உள்ளம் துவண்டது. உள்ளே ஒளிர்ந்த ஒளி விளக்கொன்று ஊதி அணைக்கப்பட்ட துக்கம் பீறிட்டது.

ரமேஷை எதிர்கொள்வதோ சித்திரவதையாக இருந்தது. "ஏன் ஒரு மாதிரியா இருக்கீங்க?" என்று அவன் கேட்டபோது அத்தனையையும் கொட்டி அழத் தோன்றியது. ஆனால், அதன் விளைவான விபரீதங்கள் நிரந்தர காயங்களை ஏற்படுத்திவிடும்.

மூர்த்தியைத் தெளிவிப்பது முதல் சவாலாகத் தோன்றியது. மேலும், ரமேஷிடம் அவர் இன்னும் சகஜமாகத்தான் இருக்கிறார். கோபமெல்லாம் மனைவியிடம்தான்.

"நாளைக்கு பாம்பே போய்ட்டு அப்படியே அங்கேருந்து அடுத்த வாரம் அமெரிக்கா போறேன். மூணு மாசம் ஆகும் வர்றதுக்கு. அதான் ரெண்டு பேரையும் பார்த்துச் சொல்லிட்டுப் போகலாம்னு வந்தேன்" ஒரு நாள் ரமேஷ் வந்து விடைபெற்றபோது நளினிக்கு நிம்மதியில் மயக்கமே வந்துவிடும் போலிருந்தது.

"ஓ! வெரிகுட்! ஆல் தி பெஸ்ட்" கைகுலுக்கி வாழ்த்தினான் மூர்த்தி.

"ஏதாவது வாங்கி வரட்டுமா அங்கேயிருந்து?" என்றபடி நளினியைப் பார்த்தவன் கலவரமானான்.

"மூர்த்தி! நளினிக்கு என்னமோ பண்ணுது... கொஞ்சம் கவனிங்க..."

"ஒண்ணுமில்லே" என்று வெராண்டா நாற்காலியில் உட்கார்ந்தவள் "போய்ட்டு வெற்றிகரமா வாங்க" என்று அவனை வாழ்த்தினாள்.

"டேக் கேர் நளினி. மூர்த்தி, யூ டேக் கேர் அஃப் ஹர்..."

மூன்று மாத இடைவெளியில் மூர்த்தியின் மனக்கோணல்களை நிமிர்த்த முடிவு கட்டினாள். செண்பகச் சரம் வாங்கிச் சென்று கற்பகாம்பாளுக்குச் சமர்ப்பித்து வேண்டினாள்.

"சேதமுற்ற என் மணவாழ்வை மீட்டுக்கொடு; சேதமுறாமல் எனது நட்புறவைக் காத்துக் கொடு..."

கபாலீசர் சன்னிதியில் ஓதுவார் பதிகம் பாடினார்.

பேராயிரம் பரவி வானோர் ஏத்தும் பெம்மானை

பிரிவிலா அடியார்க்கு என்றும் வராத செல்வம் வருவிப்பானை

மந்திரமும் தந்திரமும்



மருந்துமாகி தீரா நோய் தீர்த்தருள வல்லான் தன்னை...

கரகரவென்று நளினியின் கண்களிலிருந்து கண்ணீர் பெருகிற்று.

தீரா சந்தேக நோயைத் தீர்க்க இறையருள் வேண்டும்; அதோடு தன் பங்கிற்கு மந்திரம் தந்திரம் மருந்து யாவும் கையாள்வது என்று முடிவு செய்தாள்.

திடீரென்று ஒரு வைராக்கியம் வந்தமர்ந்தது அவள் இதய சிம்மாசனத்தில்.

சன்னதியிலிருந்து வெளிப்பட்டு கபாலீசுவரரையும் கற்பகாம்பாளையும் ஒரு சேர நோக்கும்படி நின்று மானசீகமாக அவர்களிடம் சொன்னாள் :

"எல்லாம் சரியாகறவரைக்கும் நான் செண்பகப்பூச் சூடமாட்டேன்."

(மணம் வீசும்)

# பண்ணையார் ஆ

தேர்தல் சூட்டில் அனல் பறக்கும் துறைமுக நகர் தூத்துக்குடியில் அதிரடியாக மற்றொரு சூடான நிகழ்ச்சி நடந்துகொண்டிருக்கிறது. மக்கள் நடமாட்டம் அதிகமாக இருக்கும் மார்க்கெட் ஏரியாவில் 'தூத்துக்குடி' படத்தின் படப்பிடிப்பை வேக, வேகமாக விரட்டி விரட்டி நடத்திக்கொண்டிருக்கிறார்கள். படக் குழுவின் இந்த அதிரடி வேகத்துக்குக் காரணம் கூட்டம் கூட்டமாக படையெடுத்து வந்து படப்பிடிப்பை வேடிக்கை பார்க்கக் கூடிவரும் உள்ளூர் மக்களின் அன்புத் தொல்லை.

அன்புத் தொல்லை என்றால், கதாநாயகியை வேடிக்கை பார்த்து, விசிலடிக்கிற விஷயமல்ல. 'தூத்துக்குடி' படத்தின் கதை, என்கவுன்ட்டரில் சுட்டுக் கொல்லப்பட்ட வெங்கடேச பண்ணையாரின் வாழ்க்கை வரலாறு என்று யாரோ சொல்லிவிட, அதிரடியாகக் கிளம்பிய பரபரப்பு படப்பிடிப்பை ஸ்தம்பிக்க வைத்திருக்கிறது. அடிதடியும் கட்டப் பஞ்சாயத்தும் தூத்துக்குடி மாவட்டத்தின் ஒரு முக்கிய முகமாக இன்றும் தொடர்வதால், அங்கே ராஜாங்கம் நடத்தி இறந்துபோன பிரபல ரவுடிகளின் வாழ்க்கையிலிருந்து முக்கியமான சம்பவங்களைக்கொண்டே 'தூத்துக்குடி' படத்தின் கதையை உருவாக்கியிருக்கிறார் இளம் இயக்குநர் சஞ்சய்ராம். அதிலும் தூத்துக்குடியில் புகழ்பெற்ற பிரபல தாதாக்களின் பெயரான 'லிங்கம்', 'கட்டத்துரை', 'இசக்கி' போன்றவர்களின் பெயர்களையே படத்தில் வரும் முக்கிய கதாபாத்திரங்களுக்கும் வைத்துவிட, உள்ளூர் மக்கள் மத்தியில் தீப்பற்றிக் கொள்ளாத பரபரப்பு.

'லிங்கம்' பாத்திரத்தில் நடிக்கும் ரகுமான், வெங்கடேச பண்ணையாரின் உடல்மொழி மேனரிஸத்தைப் பின்பற்றி நடிக்க ஆரம்பித்ததும் "ஏலேய் நம்ம பண்ணையாரு ஆவி வந்து ரகுமான் மேல் இறங்கிருச்சுலே! அப்படி அச்சு அசலா பண்ணையாரு மாதிரியில்ல நடிக்காரு" என்று

• கதாநாயகியுடன் ஹரிகுமார்...

சொல்லியபடி கதாநாயகி கார்த்திகாவை அம்போவென்று விட்டுவிட்டு, ரகுமான் எங்கே போனாலும் அங்கேயே போய் மக்கள் மொய்க்க ஆரம்பித்திருக்கிறார்கள். ஆனால் இயக்குநரோ "இது வெங்கடேச பண்ணையாரின் கதை இல்லவே இல்லை. கேரக்டர்களின் ஒரு சில பெயர்கள் மட்டுமே உண்மை. அவர்கள் சம்பந்த மான கதை அல்ல. இது வன்முறைக்கும் ரவுடியிஸத்துக்கும் எதிரான கதை. கதைக் களம் முழுக்க முழுக்க தூத்துக்குடி என்பதால் மொத்தப் படத்தையும் தூத்துக்குடியிலேயே எடுக்கிறேன். தூத்துக்குடி வட்டார வழக்கில் நடிகர்கள் பேசி நடிப்பதைப் பார்த்த மக்கள், தாங்களாக இது பண்ணையார் கதை என்று கற்பனை செய்து கொள்கிறார்கள். ஆனால் உண்மை அதுவல்ல" என்கிறார்.


• ரகுமான்

'தூத்துக்குடி' படத்தில் ஹீரோவாக அறிமுகமாகும் நபர் புதுமுகம் மாதிரி தெரியவில்லையே என்று நெருங்கிப் பார்த்தால், பிரபல டான்ஸ் மாஸ்டர் ஹரிகுமார். "கதையைக் கேட்டதும் 'மகாதேவன்' என்ற ஹீரோ கேரக்டர் என்னைத் தூங்கவிடவில்லை. அதனால் நாமே இந்தக் கதையைத் தயாரித்து ஹீரோவாக நடித்தால் என்ன என்று துணிச்சலாகக் களமிறங்கி விட்டேன். இந்தப் படம் வன்முறைப் படங்களுக்கு எதிரான ஒரு ட்ரெண்டாக இருக்கும் என்று நம்புகிறேன்" என்கிறார். 'தூத்துக்குடி' படம் வெளியான பிறகு தூத்துக்குடியில் கலவரம் வராமல் இருந்தால் சரிதான்.

**- ஸ்ரீசக்கரம்**

படங்கள் உதவி : **மௌனம் ரவி**

# படம் நடிக்குது!

அது ஒரு க்ளினிக் என்று நம்புவது முதலில் சிறிது கஷ்டமாகத்தானிருக்கும். குழந்தைகளுக்கான பிரத்யேக க்ளினிக். சுவரெல்லாம் சித்திரங்கள். பல 'பனிச்' நிறங்களில் பெற்றோர்கள் அமர நாற் காலிகள். குழந்தைகள் விளையாட சாமான்கள், படம் வரைய வசதியாக

# மொழி!

குட்டிமேஜை, முக்காலிகள், ஒரு அழகான சிறிய ப்ளாஸ்டிக் வீடு! சிங் கப்பூரில் க்ளினிக் கூட இவ்வளவு ஆடம் பரமாக இருந்தது, எனக்கு முதலில் ஆச் சர்யமாக இருந்தது. பல மொழி பேசும் தாய்மார்கள் குழந்தைகளுடன் காத்திருந் தனர்.

வருண் என் மடியில் தூங்கிக் கொண்டிருந்தான். இரண்டு நாட்களாக ஜுரம். என் முறை வரும் வரை வேடிக்கை பார்த்தபடி அமர்ந்திருந் தேன்.

க்ளினிக்கின் உள்ளே நுழைந்தாள் ஒரு இந்தியப் பெண். கூட ஒரு மூன்று வயதுப் பெண் குழந்தை. எனக்கெதிரில் மட்டுமே இடம் இருந்ததால் அங்கே வந்தமர்ந்தாள். அவள் உடை, தலையில் தொற்றிக்கொண்டிருந்த கண்ணாடி, கைப்பை, காலணிகள் எல்லாம் இத் தாலிய, அமெரிக்க டிசைனர்கள் செய் தது என்று சற்று சத்தமாகவே பறை சாற்றின. அவள் விரலில் இருந்த வைர மோதிரங்களை விற்றால் ஒரு குடும்பம், ஒரு மாதம் உட்கார்ந்து சாப்பிடலாம்! எங்கே என்னைப் பார்த்தால் என் இந்தியத்தனம் ஒட்டிக் கொண்டு விடுமோ என்று கவனமாக என்னைப் பார்ப்பதைத் தவிர்த்தாள்.

குழந்தையிடம் பேசும் மொழியை வைத்து இந்தியாவில் எந்தப் பகுதியைச் சேர்ந்தவள் என்று கண்டுபிடிக்கலாம் என்று நினைத்த என் எண்ணத்தில் மண்! அவள் குழந்தையிடம் சத்தமாக ஜெர்மனில் பேசினாள்! 'உனக்கும் எனக் கும் எந்தவித சம்பந்தமும் இல்லை' என்று எனக்குப் புரியவைக்க முயற்சி செய்வது போலிருந்தது.

பக்கத்தில் இருந்த ஜெர்மனியப் பெண்ணின் குழந்தையிடம் அவள் குழந்தை சரளமாக உரையாடியது. புரு வத்தை உயர்த்திய குழந்தையின் தாயிடம் அதற்குத்தான் காத்திருந்தது போல் தன் சுயசரிதையை அவிழ்த்துவிட்டாள். தன் கணவன் ஸ்விட்சர்லாந்தில் ஐந்து வருடம் பணியாற்றியது, அந்த நாட்டுக் கலாசாரம் தன்னை மிகவும் கவர்ந்து விட்டதால் தான் தீவிரமாக ஜெர்மன் கற்றுக் கொண்டது, தன் குழந்தை அங்கேயே பிறந்து மூன்று வருடம் வளர்ந்ததால்



அதற்கு ஜெர்மன் தவிர வேறு மொழி தெரியாதது, இங்கே கூட ஜெர்மன் சர்வதேச பள்ளியில்தான் குழந்தையைச் சேர்ப்பதாக உத்தேசம் என்று சொல்லிக் கொண்டே போனாள். 'நான் உன்னைச் சேர்ந்தவள்' என்று அவளுக்குப் புரிய

வைக்க மிகவும் மெனக் கெடுவது போல் தோன்றியது.

அந்த ஜெர்மனியப் பெண் சுவாரஸ்ய மாகக் கேட்பது போல் பாவனை செய்து கொண்டிருந்தாள். ஒருவேளை தான் சொன்னதின் முக்கியத்துவம் அவளுக்குப் புரியவில்லையோ என்று நினைத்தால் போலும் இந்த இந்தியப் பெண். மேலும் தீவிரமாகத் தன் மொழி வளத்தைக் காட்ட தன் மகனை மடியில் அமர்த்தி, குதிரையில் போவது போல் கால்களை மேலும் கீழுமாக ஆட்டி ஜெர்மனில் ஒரு குழந்தைகளுக்கான பாட்டு வேறு பாடிக் காண்பித்தாள்!

'உன் கணவன் கென்யாவில் பணி யாற்றியிருந்தால் நீ ஸ்வாஹிலி கற்றுக் கொண்டிருப்பாயா?' என்று இந்தியப் பெண்ணிடம் கேட்க வேண்டும்போல் இருந்தது.

'இந்த ஜெர்மனிய மங்கை இந்தி யாவில் ஐந்து வருடங்கள் வாழ்ந்தால் தன் தாய் மொழியையும் கலாசாரத்தையும் மறந்து விட்டு இந்தியனாக மாறிவிடுவாள் என்று நினைக்கிறாயா?' என்ற கேள்வியும் மனத்தில் தோன்ற, தன் குழந்தையிடம் ஜெர்மனியப் பெண் 'சாய்ந்தாடம்மா சாய்ந்தாடு' பாடினால் எப்படி இருக்கும் என்று நினைத்துப் பார்த்தேன். சிரிப்பு வந்தது.

அதற்குள் இந்தியப் பெண்ணின் பிடி யிலிருந்து தப்பிய குழந்தை, அங்கிருந்த சிறு மேஜை மேல் ஏறியது. பேச்சு மும் முரத்தில் அவள் கவனிப்பதற்குள் மேஜையிலிருந்து குதிக்க முயன்று, அஷ்ட கோணலாகக் கீழே விழுந்து, வீறிட்டு அலறியது! தன்னைச் சுதாரித்துக் கொள் வதற்குள் அவள் வாயிலிருந்து 'டக்' கென்று வெளிப்பட்டது வார்த்தை... "சனியனே!"



ரம்யா நாகேஸ்வரன்

# சாகஸம் ஆயிரம் - 9

டி.என்.ஏ. கம்ப்யூட்டிங் என்பதைப் பற்றி கொஞ்சம் விவரமாகப் பேசலாம். 1994-ல் முதலில் லியனார்டு எம்.எடெல்மன் என்னும் கம்ப்யூட்டர் நிபுணர் உயிரின ஆதாரமான டி.என்.ஏ. அணுக் கூட்டங்கள் தம்மை இரட்டிப்பாக்கும் செயலில் உள்ள Parallelism, ஒரே சமயத்தில் பல செயல்களை நிகழ்த்தும் விந்தையைக் கவனித்தார். குறிப்பாக என்ஸைம்கள் தயாரிக்கும் காரியத்தில் உள்ள பல் திறமையை அடிப்படையாகக் கொண்டு கம்ப்யூட்டர் இயலின் சிக்கலான பிரச்னைகளான ஹால்டோனியன் பாதை வகையில் குறிப்பாக, ட்ராவலிங் சேல்ஸ்மன்-விற்பனையாளரின் பயணம் என்னும் லீனியர் ப்ரோக்ராமிங் கணக்குக்கு விடைகாண பயன்படுத்த முடியும் என்று சொன்னார்.

ட்ராவலிங் சேல்ஸ்மன் பிரச்னை என்ன என்பது சொல்வதற்கு எளியது. விடை தருவதற்கு அரிது. நமக்குப் பரிச்சயமான இழந்த சக்தியை மீட்டுத்தரும் வைத்தியர்களின் மாதாந்திர சுற்றுப் பயண விவரங்களை நீங்கள் கவனித்திருப்பீர்கள். நான் அவசியம் கவனிப்பேன். அவர்கள் விற்கும் லேகியத்தைவிட அவர்கள் சுற்றுப்பயண விவரம் எனக்கு வசீகரமானது. மாத முதலில் சேலத்திலோ, பழனியிலோ பயணத்தைத் துவங்கி, தமிழ்நாட்டில் உள்ள அத்தனை ஊர்களிலும் பஸ் ஸ்டாண்டு சமீபம் உள்ள லாட்ஜுக்கோ, மேன்ஷனுக்கோ விஜயம் செய்துவிட்டு புறப்பட்ட இடத்துக்கு வந்து சேருவார். ஒரு ஊருக்கு ஒரு சுற்றில் ஒரு தடவை தான் வருவார். அவர் விற்கும் மருந்தில் எனக்குக் கவனமில்லையெனினும் அவர் சுற்றுப்பயண விவரம், கம்ப்யூட்டர் இயலில் முக்கியமானது. இது டி.எஸ்.பி. வகையைச் சார்ந்தது.

எல்லா ஊருக்கும் ஒருமுறை தான் விஜயம் செய்ய வேண்டும். புறப்பட்ட இடத்துக்கு இறுதியில் வந்து சேர வேண்டும். இவர் எந்த ரூட்டில் சென்றால் பயண தூரம் குறைவாகும் என்பதே டி.எஸ்.பி. இந்தப் பிரச்னையை தற்போது கம்ப்யூட்டரில் திறமையாக நிறைவேற்ற கர்மார்கர் என்பவரின் அல்கரிதம் தான் சிறந்தது. டி.என்.ஏ. கம்ப்யூட்டிங் மூலம் தீர்க்க, ஒரு வழி சொன்னீர்களானால்...,

# ஒரே ஒரு சில்லுக்குள்...

சுஜாதா நிகர்நிலை பல்கலைக்கழகத்தி லிருந்து உங்களுக்கு டாக்டரேட் பட்டம் உடனடி (தபால் கூலி தனி). டி.என்.ஏ கம்ப்யூட்டிங் முறைகளைப் பயன்படுத்த உங்களுக்கு கொஞ்சம் மாலிக்யூலர் பயாலஜி தெரிய வேண்டும். ஏடெல்மென் டி.என்.ஏ. கரைசல் ஒன்றை எடுத்துக் கொண்டார். அதன் டி.என்.ஏ. மாலிக்யூலர் ஒரு அமைப்பிலிருந்து மற்றொரு அமைப்புக்கு அத்தனை பாதைகளையும் ஆராய்ந்தார். குறிக்கோளிலிருந்து விலகிச் சென்ற பாதைகளையெல்லாம் நீக்கினார். இறுதியில் விருப்பப்பட்ட மாற்றத்தை உண்டாக்கும் சிறந்த பாதையைக் கண்டறிந்தார் ஒரு எலி போல்.



விஸ்கான்சின் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த லூயி எம்.ஸ்மித் என்பவர் ஜீன் சிப்களைப் பயன்படுத்தி இதைச் செய்திருக்கிறார். ஜீன் சிப் என்பது டி.என்.ஏ. பரிசோதனைக்கு அடிக்கடி பயன்படும். குறிப்பிட்ட சில டெஸ்டுகளை மட்டும் செய்து விரிவாகக் கண்டு சொல்லக்கூடிய சில்லுகள் எளிதாகச் சொல்லிவிட்டாலும் தற்போது நானோ டெக்னாலஜி சாதனங்கள் ஆராய்ச்சிக் கூடத்தை விட்டு அதிகம் வெளியே வரவில்லை. எதிர்கால சாத்தியங்கள் தான் அதிகம் தெரிகின்றன. கார்பன் நானோ ட்யூபுகள் என்னும் நுட்பமான ஒரு எலக்ட்ரான் பாதையில் வியாபார ரீதியில தற்போது வெற்றி கண்டிருக்கின்றன. மிகவும் நுண்ணிய ஒயர்களை நானோ ஒயர்கள் என்பார்கள். இவற்றைப் பயன்படுத்தி எதிர்காலத்தில் நம் ஜீனோம் என்னும் டி.என்.ஏ. அமைப்பு அத்தனையும் ஒரே ஒரு சில்லுக்குள் அடக்கிவிட முடியும் என்கிறார்கள். இதன் மருத்துவப் பயன்பாடுகள் பிரமிக்க வைக்கின்றன. மேலும் உயிரின அடையாளம் ஜீனோம் உயிர் அழியும்போது அழிகிறது. அதன் முழு அமைப்பை ஒரு சில்லில் எழுதி வைப்பதில் அந்த உயிர் அமரத்துவம் பெறுகிறது. நானோ டெக்னாலஜியும் மைக்ரோ டெக்னாலஜியும் இணைந்து சில சாத்தியக்கூறுகளை ஏற்படுத்தியுள்ளன. கம்ப்யூட்டர் நினைவகங்கள் இரண்டு வகை, ராம், ரேம் (ROM RAM). இதில் ரேம்-மின் இணைப்பை நீக்கினால் ஆவியாகிவிடும். ராம் என்பது சாஸ்வதமானது. இதன் சாஸ்வதமும் ஒரு எல்லைக்குட்பட்டு நாளடைவில் கசிந்து பிழைகள் நேரிடும். நானோ டெக்னாலஜியில் பிழையே வராத, அழியவே அழியாத ஞாபக அடுக்குகள் சாத்தியம் என்கிறார்கள்.

**(விந்தை தொடரும்)**

படம்: **ஸ்ரீஹரி**

சில நாளைக்கு முன் பிராட்வே முனையில் சற்று நேரம் நான் நின்று கொண்டிருக்க நேரிட்டது. அங்கே என்னை ஒருவரும் உட்காரச் சொல்ல வில்லையாதலாலும், வண்ணாரப் பேட்டை டிராம் வண்டியை நான் பிடிக்க வேண்டியிருந்ததாலும், அவ்வாறு நின்று கொண்டிருந்தேன். அங்கே என்னருகில் இன்னும் இரண்டு பேரும் நின்று கொண்டிருந்தார்கள். அவர்களுக்குள் பின்வரும் சம்பாஷணை நடந்தது:

# புரிஞ்சுதா...

**முதல் மனிதர்:** ஏன் ஸார்! நீங்கள் எழும்பூர் டிராமுக்காகக் காத்துக் கொண்டிருக்கிறீர்களோ?

**இரண்டாம் மனிதர்:** ஆமாம், அரை மணியாய்க் காத்துக் கொண்டிருக்கிறேன். அம்பட்டன் வாராவதிக்கு நூறு டிராம் போய்விட்டது; லஸ்ஸுக்கு ஒரு வண்டி கூட வரவில்லை. பஸ்ஸிலே போக வேண்டியதுதான் போலிருக்கிறது.

**மு. மனிதர்:** என்ன சொல்கிறீர்கள்? பஸ்காரன் அம்பட்டனைத் தேடிக் கொண்டா போயிருக்கிறான்? அவனுக்கு என்ன இன்றைக்கு க்ஷவரக் கல்யாணம் பண்ணிக்க உத்தேசமோ?

**இ. மனிதர்:** என் பெண்ணுக்குத்தான் கல்யாணம்; டாக்டர் குருநாதனின் பிள்ளைக்கு நிச்சயம் செய்திருக்கிறது. அப்பா! என்ன சத்தம் இங்கே? தலை வலி வந்துவிடும் போலிருக்கிறது.

**மு.மனிதர்:** டாக்டருக்கே தலைவலி வந்துவிட்டால் ஆபத்துதான். ஏதாவது மருந்து வாங்கிப் போட்டுப் பார்க் கிறதுதானே?

**இ.மனிதர்:** பார்க்காம லென்ன? அதுதான் அவ்வளவு ஸ்பஷ்டமாய் எழுதியிருக்கிறதே; 'காங்கிரஸுக்கே வோட்டுக் கொடுங் கள்; சாதிக் கட்சியை ஒழியுங்கள்' என்று.

**மு. மனிதர்:** நான் ஒன்றும் சாதிக் கட்சி பேசவில்லை. மாசிலாமணிதான் 'நாங்கள் எப்படியும் உங்களைவிட ஓசத்தி; தொண்டை மண்டலம் முதலியார் அல்லவா?' என்றான். எனக்குக் கோபம் வந்துவிட்டது.

**இ. மனிதர்:** தொண்டையிலே புண்ணி ருந்தால், கோபித்துக்கொண்டு என்ன செய்வது? ஆஸ்பத்திரிக்குப் போய் மருந்து தடவிக்கொள்ள வேண்டும்.

**மு. மனிதர்:** ஆஸ்பத்திரியில்தான் என் சம்சாரத்தை விட்டிருக்கிறேன். அவளைப் பார்க்கத்தான் அவசரமாய்ப் போக வேண்டும். இந்த 'நர்ஸு'கள் இருக்கிறார்களே, அவர்கள் சரியாய்க் கவனிப்பதேயில்லை.

**இ.மனிதர்:** நர்ஸுக்கென்ன கவலை? அவளா பிரசவிக்கப் போகிறாள்? இதை உத்தேசிக்கும்போதுதான் கர்ப்பத்தடை அவசியம் என்று தோன்றுகிறது. ராமேசம் கூட அதுதான் சொல்கிறார்.

**மு.மனிதர்:** ஆமாம், ராமேசுவரம் போனால் குழந்தை பிறக்குமென்பதுதான் பிரசித்தியாயிற்றே. போன வருஷத்தில் எங்கள் அடுத்த வீட்டு சின்னசாமியும் அவர் சம்சாரமும் போய் வந்தார்கள்.



இந்த வருஷம் குழந்தை பிறந்தது.

**இ. மனிதர்**: பின்னே, வருஷம் பிறக்காமல் என்ன செய்யும்? பிறந்துதானே ஆகவேண்டும்? யுவ வருஷத்துக்கப்புறம் தாது வருஷமாம். தாது வருஷத்துப் பஞ்சம் எப்படியிருக்குமோ தெரியவில்லை. எல்லாரும் சாப்பாட்டுக்குத் திண்டாட வேண்டியதுதான்.

இதற்குள் வண்ணாரப்பேட்டை டிராம் வந்துவிட்டபடியால், மேற்படி ரஸமான சம்பாஷணையை நடுவில் விட்டு நான் போக வேண்டியதாயிற்று.

# ...புரியலியா?




மேற்படி சம்பாஷணை முறை எனக்கு மிகவும் பிடித்திருந்தது. அந்த முறையில் ஒருவர் சொல்வதை இன்னொருவர் கவனிக்க வேண்டிய அவசியமேயில்லை. ஒருவர் சொல்வதில் ஏதாவது ஒரு வார்த்தையை எடுத்துக்கொண்டு இன்னொருவர் தனக்கிஷ்டமானதைப் பேச வேண்டியது. இந்த முறையில் மூளைக்குக் கொஞ்சம் கூட சிரமம் கிடையாதல்லவா?



ஆனால் வேறு சிலர் இருக்கிறார்கள். அவர்கள் பேசும்போது தாங்கள் சொல்வதை எதிராளி கிரஹிப்பது செய்து கொண்டாலல்லாமல் மேலே போக மாட்டார்கள். இப்படிப்பட்டவர்களுடன் சம்பாஷிப்பது மிகவும் சிரமமான காரியம்.

தமிழ்நாட்டில் பிரசித்தி பெற்ற வடமொழி - தென்மொழிப் புலவர் ஒருவர் இருக்கிறார். அவர் பேசும்போதெல்லாம் இடையிடையே, "விளங்கிற்றா?" "புரிந்ததா?" "நான் சொல்றது அர்த்தமாச்சா?" என்று கேட்டுக் கொண்டுதான் மேலே போவார்.

ஒரு சமயம் இப்புலவர் பெருமானுடன் சில நண்பர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள். ஏதோ பேசிக் கொண்டிருந்தவர் சட்டென்று நிறுத்தி, என் அருகிலிருந்த நண்பரைப் பார்த்து, "அய்யாசாமிப் பிள்ளை! உங்களுக்கு அர்த்தமாச்சா?" என்று வினவினார். நான் அந்த நண்பருடைய காதோடு "உங்களுடைய கிரஹிப்புத் திறமையில் மட்டும் அவர்களுக்கு அவ்வளவு சந்தேகம் ஏன் வந்தது?" என்று கேட்டேன். "அப்படி இல்லை; இங்குள்ளவர்களில் அவர் சொன்னதைத் தெரிந்து கொள்ளக்கூடிய சக்தி மற்றவர்களுக்குக் கிடையாவே கிடையாது என்பது அவருக்கு நிச்சயம்; என் விஷயத்தில்தான் கொஞ்சம் நம்பிக்கை" என்றார் அய்யாசாமிப்பிள்ளை.

மேற்கூறிய புலவரைப் போல், அடிக்கடி சந்தேகப்பட்டு, "தெரிந்ததா?", "என்ன நான் சொல்கிறது?" என்று கேட்டுக் கொண்டு பேசுகிறவர்களிடம் எனக்கு ரொம்பப் பயம். அவர்களைக் கண்டால் ஓட்டம் பிடிக்கக்கூடத் தயங்கமாட்டேன்.

**- 'கல்கி களஞ்சியம்' நூலிலிருந்து...**
**வானதி பதிப்பகம்.**

# 7.5.2006 முதல் 13.5.2006 வரை

**மேஷம்** : தைரியமான வாரம். மனதில் சந்தோஷம் கிட்டும். தனம், குடும்பம், வாக்கு மேன்மை உண்டாகும். கல்வி வளம் மேலோங்கும். திருமணக் காரியம் கைகூடும். கொடுக்கல் வாங்கல் நன்கு அமையும். வீடு மனை வாங்க நல்ல காலம். வியாபாரத்தில் வளர்ச்சி காணும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. கணவன் - மனைவி உறவு நற்பலனைத் தரும். மனசலனம் போகும். எதிலும் வெற்றிகளைக் கொடுக்கும். ஆஞ்சனேயர் வழிபாடு செய்துவர நற்பலனை அடைய முடியும்.

**ரிஷபம்** : வழக்கு வெற்றி பெறும் வாரம். எதிர்ப்பு, தொல்லை குறையும் மன உளைச்சல் நீங்கும். மனதில் இருக்கும் பயம் போகும். நெருங்கியவர்கள் இடம் மாறிப் போவார்கள். உடல் ஆரோக்கியம் சீராகும். பூர்வீகச் சொத்து பாகப்பிரிவினை ஏற்படும். கூட்டுத் தொழில் செய்பவர்கள் மத்தியில் விரிசல் ஏற்படும். ஞாபக மறதி இருக்கும். மாணவ மாணவியர் படிப்பில் அக்கறை செலுத்தவும். வேலை மாற்றம் உண்டாகும். புதிய தொழில்களை சற்றுத் தள்ளிப் போடவும். சுபகாரியம் கைகூடும். ராகு / கேது / வழிபாடு செய்து வர நற்பலன் கிடைக்கும்.

**மிதுனம்** : திருமணக் காரியம் கைகூடும். வீடு / மனை வாங்க ஏற்ற தருணம். கொடுக்கல் வாங்கல் நன்றாக இருக்கும். பணக் கஷ்டம் இருக்காது. ஆடை அலங்காரப் பொருட்கள் வாங்குவீர். வீடு மாற்றம் ஏற்படும். தாயின் உடல்நிலை சற்று பாதிக்கப்படும். உத்தியோகத்தில் உயர்வு கிட்டும். வெளியூர்ப் பிரயாணம் வந்து சேரும். பத்திரிகைகளில் பெயர் வரும். கணவன்- மனைவி உறவு நன்றாக இருக்கும். குழந்தைப் பேறு கிட்டும். சத்ரு தொல்லை விலகும். மனச் சந்தோஷம்

படம் : ஸ்ரீஹரி



கிட்டும். வழக்கு வெற்றி அளிக்கும். புதிய தொழில் செய்ய ஏற்ற தருணம். ராகு / கேது வழிபாடு செய்து வரவும்.

**கடகம் :** எண்ணிய காரியம் ஈடேறும். பொருளாதாரக் கஷ்டம் விலகும். சிலருக்கு வீடு மாற்றம் ஏற்படும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். குழந்தைகள் இடம் மாறிச் செல்வார்கள். நண்பர் / உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் போக்கான சூழ்நிலை ஏற்படும். உத்தியோகஸ்தர்களுக்கு பதவி உயர்வு கிட்டும். குரு / சனி வழிபாடு நற்பலனைத் தரும்.

**சிம்மம் :** மனக்குழப்பமான வாரம். கொடுக்கல் வாங்கல் சிக்கலை ஏற்படுத்தும். யாருக்கும் ஜாமீன் போடக் கூடாது. வண்டி வாகனத்தில் போகும்போது கவனம் தேவை. குடும்ப வாழ்வில் விட்டுக்கொடுத்துப் போவது நற்பலனை அளிக்கும். குழந்தைகள் இடம் மாறி வெளியூர் செல்லும்படியான சூழ்நிலைகள் ஏற்படும். உடல் ஆரோக்கியத்தில் கவனம் தேவை. உத்தியோகத்தில் போட்டி இருக்கும். வாக்குவாதம் தவிர்க்கவும். வியாபாரத்தில் மெதுவான வளர்ச்சி உண்டாகும். புதிய முயற்சிகளை சற்றுத் தள்ளிப் போடவும். காவல் தொந்தரவுகள் வரும். ராகு / கேது / சனி / குரு வழிபாடு அவசியம்.

**கன்னி :** குடும்ப வாழ்வில் அனுசரணை தேவை. திருமணக் காரியம் கைகூடும். கொடுக்கல் வாங்கல் நற்பலனைத் தரும். புதிய வீடு / மனை வாங்க ஏற்ற தருணம். கல்வி வளம் மேலோங்கும். வியாபாரத்தில் நல்ல வருவாய் கிட்டும். புதிய தொழில் தொடங்கலாம். உடல்நிலையில் கவனம் தேவை. வெளியூர்ப் பிரயாணம் செல்ல நேரிடும். வழக்கு வெற்றி அளிக்கும். வியாபாரத்தில் நல்ல அபிவிருத்தி ஏற்படும். நண்பர் உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். ராகு / கேது வழிபாடு நற்பலனைத் தரும்.

**துலாம் :** வழக்கு வியாபாரம் வெற்றி அளிக்கும். கொடுக்கல் வாங்கல் நற்பலனை அளிக்கும். பணக்கஷ்டம் இராது. மாணவ மாணவிகளுக்கு நல்ல

**தஞ்சை பரத்வாஜ்**

ரிசல்ட் கிடைக்கும். விரும்பிய துறையில் சேர அழைப்புக் கிட்டும். உத்தியோகத்தில் உயர்வு, இடமாற்றம் ஏற்படும். வீடு / மனை வாங்க ஏற்ற காலம். வியாபாரத்தில் நல்ல லாபம் காணும். நண்பர்/ உறவினர் மூலம் அனுகூலம் ஏற்படும். குரு / சனி வழிபாடு செய்து வர நற்பலன் கிட்டும்.

**விருச்சிகம் :** பெயர், புகழ் செல்வாக்கு, பணம் வந்து சேரும். உடல்நிலை பாதிக்கும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். பணக் கஷ்டம் இராது. குழந்தைகள் பற்றின மனக்கவலை போகும். நண்பர் உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். பூர்வீகச் சொத்து பாகப் பிரிவினை ஆகும். சத்ரு தொல்லை நீங்கும். உத்தியோகத்தில் உயர்வு இடமாற்றம் ஏற்படும். குடும்பத்தில் சுபகாரியம் ஏற்படும். புதிய தொழில் துவங்க நல்ல காலம். வீடு / மனை வாங்க உத்தமம். ராகு / கேது வழிபாடு செய்து வரவும்.

**தனுசு :** பணக்கஷ்டம் இராது. உடல்நிலை பாதிக்காது. புதிய முயற்சி பலன் அளிக்கும். செலவுகள் சுபமானதாக இருக்கும். குழந்தைப்பேறு கிட்டும். திருமணத் தடங்கல் நீங்கும். மன சலனம் தீரும். பொருளாதார மேன்மை உண்டாகும். உத்தியோகத்தில் உயர்வு, இடமாற்றம் ஏற்படும். கொடுக்கல் வாங்கல் நன்மை தரும். குழந்தைகள் பற்றின மனக்

# நடக்குமென்பார்; நடக்கும்!

● எச்.சங்கரன், சென்னை - 61

***எனது மகனின் திருமணம் எப்போது நடக்கும்?***

தங்கள் பையனுக்கு 2006-ல் திருமணம் முடியும். படித்த, நல்ல வேலையிலுள்ள பெண் அமைவாள்.

● ஏ.சுவாமிநாதன், சென்னை

***கம்ப்யூட்டர் விற்பனை மற்றும் சேவை மையமொன்றை நானும், எனது நண்பர்களும் சேர்ந்து துவங்கியுள்ளோம். எனது தொழில் மற்றும் எதிர்காலம் எப்படி அமையும்?***

உங்களுக்கு 23 வயது 3 மாதம் 13 நாட்கள் வரை கேது தசை நடக்கும். இந்தத் தசை சுமாராக இருக்கும். சுக்ரதசை நன்றாக இருக்கும். கூட்டுத் தொழில் சரிப்பட்டு வராது.

# பரத்வாஜ் பதில்கள்

● எம்.சுந்தரம், மதுரை

***என் பெயர் மற்றும் மனைவி பெயர் சேர்த்து தொழில் தொடங்கலாமா? தொழிலை சென்னைக்கு மாற்றும் அமைப்பு உள்ளதா?***

உங்கள் மனைவிக்கு சனி தசை நடைபெற்று வருகிறது. மனைவி பெயரில் உங்கள் மனதுக்குப் பிடித்த மெடிக்கல் தொழில் நன்றாக இருக்கும். இடம் விட்டு இடம் மாறிவந்து தொழில் செய்தால் நற்பலன் கிடைக்கும்.

● ஜெயலட்சுமி, மயிலாப்பூர்

***எனக்கு அரசு வேலை அமைவதற்கு வாய்ப்புள்ளதா?***

உங்களுக்கு அரசு வேலை கிடைப்பது அரிது. தனியார் வேலை நற்பலனைத் தரும்.

கவலை தீரும். தூர தேசப் பிரயாணம் செல்லும் சூழ்நிலை உருவாகும். நண்பர் / உறவினர்களால் ஆதாயம் கிட்டும். ராகு / கேது / சனி வழிபாடு சிறந்தது.

**மகரம் :** புதிய வீடு / மனை வாங்க நல்ல தருணம். தனம், வாக்கு, கல்வி வளம் மேலோங்கும். சத்ரு தொல்லை விலகும். எண்ணங்கள் யாவும் ஈடேறும். வழக்கு வெற்றி அளிக்கும். உத்தியோகத்தில் இடமாற்றம் ஏற்படும். பிரிந்த குடும்பம் ஒன்றுபட்டு வாழும் சூழ்நிலை உருவாகும். நீண்டநாள் ஆசைகள் நிறைவேறும். மனதில் புத்துணர்ச்சி ஏற்படும். தொழில் அபிவிருத்தி செய்ய நேரும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. திடீர் தனயோகம் கிட்டும். கலைஞர் / எழுத்தாளர்கள் ஏற்றம் பெறுவார்கள். சனி / குரு வழிபாடு செய்து வருவது நற்பலனை அளிக்கும்.

**கும்பம் :** பணக்கஷ்டம் வராது. மனதில் ஒருவிதமான டென்ஷன் இருக்கும். உத்தியோகத்தில் நற்பெயர் ஏற்படும். வேலைப் பளு ஜாஸ்தி ஆகும். உடல் நிலையில் கவனம் தேவை. ஜாமீன் / கொடுக்கல் வாங்கலில் எச்சரிக்கையுடன் செயல்படவும். வாகனத்தில் செல்லும் போது கவனம் தேவை. கைப்பொருள் மீது கவனம் தேவை. வேலையில் உயர்வு, இடமாற்றம் கிட்டும். கணவன்-மனைவி அனுசரணையுடன் நடந்து கொள்வது நல்லது. வாக்குவாதம் தவிர்க்கவும். புதிய சொத்துகள், ஆடம்பர பொருட்கள் வாங்க நல்ல காலம். மறைமுகத் தொந்திரவுகள் இருப்பினும் பாதிப்பு இல்லை. குழந்தைப்பேறு கிட்டும். ராகு / கேது வழிபாடு நல்லது. வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும்.

**மீனம் :** மனக்குழப்பம் தீரும். வேலைப்பளு ஜாஸ்தி இருக்கும். கொடுக்கல் வாங்கலில் கவனம் தேவை. குடும்ப வாழ்வில் அனுசரணை தேவை. எதிர்பாராத தனயோகம் கிட்டும். நண்பர் / உறவினர்களால் ஆதாயம் ஏற்படும். நீண்ட காலக் கனவுகள் பலிக்கும். உடல் நிலை பாதிக்காது. பணக்கஷ்டம் விலகும். எதிரிகளால் தொல்லை இருக்காது. செலவுகள் கட்டுக்குள் இருக்கும். புதிய சொத்துகள் வாங்க நல்ல காலம். உத்தியோகத்தில் பதவி உயர்வு / இடமாற்றம் ஏற்பட வாய்ப்பு உண்டு. புதிய தொழில் முயற்சி நன்கு பலன் தரும். ராகு / கேது / குரு / சனி வழிபாடு செய்து வருதல் நற்பலனைத் தரும்.

## பொக்கிஷம்

தொல்காப்பியம், விவேக சிந்தாமணி, பட்டினப்பாலை, குறிஞ்சிப் பாட்டு, முல்லைப்பாட்டு, புறநானூறு... இதெல்லாம் என்னவென்று வரும் தலை முறையினர் கேட்பர். இதையெல்லாம் இணையத்தில் பதிந்து வைத்தால் இளைஞர்கள் எடுத்துக் கொள்ளக்கூடும் என்ற எண்ணத்தில் உருவாக்கப்பட்டதுதான் ப்ராஜெக்ட் மதுரை. இணையத்தில் இலக்கியத் தமிழைப் படிக்க, www.infitt.org/pmadurai/index.html. இந்தத் தளத்தில் சித்தர் பாடல்கள், பட்டினத்தார் பாடல்கள், விவிலியம் போன்ற பல அரிய விஷயங்களைப் பத்திரப்படுத்தியிருக்கின்றனர். வைரமுத்துவின் தண்ணீர் தேசமும் கிடைக்கிறது.

• கிம் சர்மா



# அட! ஜீ லவ் யுவி!

## பெருமூச்சு

கடந்த சில வருடங்களாக 'யுவி' (யுவராஜ் சிங்) கிரிக்கெட் ரசிகர்களின் ஹாட் டார்லிங். அதுவும் ரசிகைகளின் இதயத் துடிப்பை அடிக்கடி எகிற வைக்கும் ஆக்ஷன் யார்க்கர். இத்தனை பிரபலமான ஓர் இளம் வீரர் பற்றி காதல், கல்யாண கிசுகிசு வந்தாக வேண்டுமே. பாலிவுட் நடிகை கிம் சர்மா - யுவி பற்றிய கிசுகிசுக்களுக்கு தற்போது விடை கிடைத்துள்ளது. தனக்கும் யுவிக்கும் விரைவில் டும்டும் நடக்கும் என அறிக்கை விட்டுப் பல ரசிகைகளின் வயிற்றெரிச்சலைக் கிளப்பிவிட்டுள்ளார் கிம். சென்ற வாரம் இணையத்தில் இளசுகளை அதிகம் பெருமூச்சு விடச் செய்த நியூஸ் இதுவே. (www.glamsham.com)

## டௌன்லோட்

இன்ஸ்டிடியூட்ல போய் டைப்பிங் கத்துக்காதவங்களுக்கு முதன் முதலா கம்ப்யூட்டர் கீபோர்டைப் பார்க்குறப்போ ஏதோ அலர்ஜியாத்தான் இருக்கும். அதுக்காக உங்க விரல்களுக்கு கீபோர்டு பாஷையைப் பரிச்சயப்படுத்தாம இருக்க முடியுமா? பத்து விரல்களுக்கும் பயிற்சி கொடுக்க www.sharewareplaza.com/Ten-Thumbs-Typing-Tutor-download_7688.htmlங்கற அப்ளிகேஷனை டௌன்லோட் பண்ணிக்கோங்க. அப்புறம் நீங்க எவ்வளவு கரெக்டா டைப் பண்ணுறீங்கன்னு கணக்குப் போட்டுக் கத்துக்கலாம். போரடிச்சா 'விளையாட்டு' ஸ்டைல்லயும் கத்துக்க வழி பண்ணுது இந்த அப்ளிகேஷன்.

- முகில்

# சர்ச் இன்ஜின்

# குறையொன்றுமில்லை

**ரா**மாயணத்திலே வால்மீகி என்ன சொல்கிறார் பாருங்கள் :

பகவான் ஸ்ரீராமன் மால்யவான் என்ற குகையிலேயிருந்து வெளியே வருகிறான். அப்படி குகைக்குள்ளேயிருந்து வரக்கூடிய ராமனைப் பார்த்து, "நரசிம்ஹன் வெளியே வருகிறான்" என்கிறார் வால்மீகி.

அதனால்தான் ஆண்டாள் பாடுகிறபோது 'அது மிருகமும் அல்ல; மனிதனும் அல்ல...' என்கிறாள். அது எங்கே வாஸம் பண்ணுகிறது என்றால், எப்போதும் குகைக்குள்ளே வாஸம் பண்ணுகிறது.

மட்டபள்ளி க்ஷேத்திரத்திலே போய்ப் பார்த்தால் யோகானந்த நரசிம்ஹன் அந்த ராஜ்யலக்ஷ்மி ஸமேதனாக தன்னுடைய பேடையோடு சேர்ந்து உறைகிறான்.

அஹோபில க்ஷேத்திரத்தில் அழகாக உறைகிறான். அஹோ... பிலம்; அஹோ... பலம் என்கிறபடிக்கு வசிக்கிறான். பிலம் என்றால் குகை. ஆச்சரியமான குகை; அவன் ஆச்சரியமான பலம் பொருந்தியவன்.

அசுரனை - ஹிரண்ய கசிபுவை - அவன் கொன்றபோது, தேவர்களெல்லாம் "அஹோ பலம்!" என்று ஆச்சர்யப்பட்டார்களாம். அந்த அஹோபில குகைக்குள்ளே அவன் வாஸம் பண்ணுகிறான். அப்படி வாஸம் பண்ணக்கூடியவன், வேதமாகிற பர்வதத்தில் உபநிஷதமாகிற குகைக்குள்ளே இருக்கக்கூடியவன் நரசிம்ஹன்.

இதைக் கொண்டுதான் ஆண்டாளும்

*"மாரி மலை முழைஞ்சில் மன்னிக்*
*கிடந்து உறங்கும்*
*சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீ விழித்து*
*வேரி மயிர் பொங்க எப்பாடும்*
*பேர்ந்து உதறி*
*மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டுப்*
*போதருமா போலே நீ பூவைப்பூ*
*வண்ணா! உன்*
*கோயில் நின்று இங்ஙனே போந்*
*தருளி கோப்பு உடைய*
*சீரிய சிங்காசனத்து இருந்து யாம்*
*வந்த*
*காரியம் ஆராய்ந்து அருள் - ஏலோர்*
*எம்பாவாய்."*

என்று இந்தப் பாசுரத்திலே, பர்வத குகைக்குள்ளேயிருந்து எம்பெருமான் நரசிம்ஹன் வெளியே வரவேண்டும் என்கிறாள் திருப்பாவையிலே. 'யாமறிந்த காரியம் ஆராய்ந்து அருள்' என்று பிரார்த்திக்கிறாள். யாரிடத்திலே பிரார்த்திக்கிறாள்...? நரசிம்ஹனிடத்திலேதான் பிரார்த்திக்கிறாள் ஆண்டாள்.

**ரா**மாயணத்திலும் நாம் கவனித்துப் பார்த்தோமானால், நரசிம்ஹன் சுக்ரீவனால் சொல்லப்பட்டான். அடுத்து வால்மீகியும் சொல்கிறார். அடுத்து பாருங்கள், விபீஷண சரணாகதி கட்டத்திலே, விபீஷணனைச் சேர்த்துக் கொள்ளக் கூடாது என்று எல்லோரும் சொல்கிறபோது, சுக்ரீவனைப் பார்த்து ஸ்ரீ ராமனே கேட்கிறான் : "நான் யார் தெரியுமா?"

'தசரதனுடைய பிள்ளை' என்றுதான் எல்லார் மனத்திலும் விடை தோன்றியிருக்கும்.

"அதுதான் இல்லை; நான் நினைத்தால் இப்போதே பிசாசுகளான ராக்ஷஸர்கள் யாராயிருந்தாலும் அவர்களை என் விரல் நுனியினாலேயே நசுக்கி

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

எட்டாம் பாகம் 18

விடுவேன்" என்றான்.

ராமபிரான், தன் வில்லின் ஒரு பாணத்துக்கு யாரையும் இலக்காக்கு வேன் என்றல்லவா பேசியிருக்க வேண் டும்! அதை விடுத்து, 'விரல் நுனி யினாலே அழிப்பேன்' என்றான்.

"மஹாவிஷ்ணுவின் பஞ்சாயுதங்களே நகங்களாயின நரசிம்ஹ அவதாரத்தில்" என்கிறார் சுவாமி தேசிகன்.

தசாவதார ஸ்தோத்திரத்திலே நர சிம்ஹ அவதாரத்தைச் சொல்லுகிற போது, 'மற்ற அவதாரங்களில் இவன் ஆயுதங்களைக் கையில் பிடித்துக் கொள்ள வேண்டும். ஆனால், நரசிம்ஹ அவதாரத்தில் இவன் ஆயுதங்களை உதறினாலும் அவை கீழே விழாது' என்று சொல்லியிருக்கிறது.

பகவானுக்கும் புதுமையிலே வியா மோகம்! எப்பப் பார்த்தாலும் சங்கு - சக்கர ஆயுதங்களை எடுத்துக்கொண்டு வந்தால் சங்கி - சக்ரி என்று அழைப் பார்களல்லவா. அதனால் அதை மாற்றி விட வேண்டும் என்று நகங்களாக மாற்றிக்கொண்டுவிட்டான்!

அந்த நகங்களும் ஸ்தோத்திரம் பண்ணப்படுகின்றன. நூதனனாக வந்த பரமாத்மா ராமாவதாரத்திலும் அதை மறக்காமல் சொல்கிறான். 'நகங்களா லேயே அழித்துவிடுவேன்' என்று ராமனே தன்னை நரசிம்ஹனாகப் பேசிக்கொண்டான்.

அந்த சீதையைப் பார்த்து ஆஞ்ச னேயன், "அம்மா! எதற்காக இவ்வாறு கண்ணீர் விடுகிறீர்கள்? என் முதுகிலே



ஏறி வரப்போகிறான் - நரசிம்ஹன் வரப் போகிறான். உங்கள் துயர் துடைக்க" என்கிறான்.

அதனால்தான் நரசிம்ஹன் இருக்கிற இடத்தில் எல்லாம் ஆஞ்சனேயனும் நின்று கொண்டிருக்கிறான்.

ஷோளிங்கபுரம் போனால் பெரிய மலை - சின்ன மலை என்று இரண்டும் பார்க்கிறோம். பெரிய மலையிலே நரசிம் ஹன்; சின்ன மலையிலே ஆஞ்சனேயன்.

எங்கு பார்த்தாலும் அப்படித்தான். நாமக்கல் க்ஷேத்திரத்துக்குப் போனால் உள்ளே குகைக்குள்ளே நரசிம்ஹன் எழுந்தருளியிருக்கிறான். எதிரே ஆஞ்ச னேயன் காட்சி அளிக்கிறான். அந்த ஆஞ்சனேயன் க்ஷேத்திரத்திலிருந்து நூல் இழுத்துக்கொண்டே போய் குகைக் குள்ளே போவோமானால், அது நேரே நரசிம்ஹனுடைய திருவடியிலே போய் நிற்கும். ஆஞ்சனேயன் அந்தத் திருவடி யையே சேவித்துக் கொண்டிருக்கிறான்.

மட்டபள்ளி க்ஷேத்திரத்தில் நரசிம் ஹனின் எதிரே ஆஞ்சனேயன் நின்று கொண்டிருக்கிறான். எங்கும் ஆஞ்சனே யன் நரசிம்ஹனைக் கை கூப்பிய வண் ணம் சேவித்துக் கொண்டிருக்கிறானே!

ஏனென்றால், சீதா பிராட்டியினிடத் திலே, "என் முதுகிலே ஏறி நரசிம்ஹன் வரப்போகிறான்" என்று சொன்னான் அல்லவா... அதற்கு அடையாளமாக, ஆயத்தமாக நிற்கிறான் ஆஞ்சனேயன்.

பகவானே தன்னை ராமாயணத் திலே நரசிம்ஹன் என்று சொல்லிக் கொண்டதனாலே, ராமாயணத்தில் எங்கு தொட்டாலும் நரசிம்ஹ மயமாக இருப்பதனாலே ராமாயணமே நரசிம் ஹனைத்தான் கொண்டாடுகிறது.

**ம**ஹாபாரதமும் நரசிம்ஹனைத் தான் கொண்டாடுகிறது என்பதற்கு சஹஸ்ரநாமமே அத்தாட்சி. மஹாபார தஸாரமான சஹஸ்ரநாமத்திலே, ஆரம் பத்திலே 'நாரசிம்ஹ வபு ஸ்ரீமான்' என்றும் கடைசியிலே 'ஸர்வ பிரஹர ணாயுத:' என்றும் வருகிறது. ஆதி - அந் தம் இரண்டுமே நரசிம்ஹனைப் பேசின தனாலே சஹஸ்ரநாமம் மொத்தம் நரசிம்ஹனையே சொல்கிறது.

சஹஸ்ரநாமம் தன்னுள் மொத்த மஹாபாரத கதையையும் வைத்துக் கொண்டிருக்கிறது. சஹஸ்ரநாமத்தில் உள்ள ஒவ்வொரு நாமத்தையும் விளக் கிக்கொண்டே போனோமானால், மஹாபாரதம் பதினெட்டு பர்வாவில் சொல்லப்பட்ட கதை மொத்தம் அதிலே வந்துவிடும்.

ஆகவே மஹாபாரத கதையையும் வைத்துக் கொண்டிருக்கிறது, உபநிஷத் அர்த்தத்தையும் வைத்துக் கொண்டிருக் கிறது. இதில் இல்லாதது வேறு எதிலும் இல்லை என்கிற ரீதியில் பெருமை யுடையதனாலே மஹாபாரதம் மொத் தம் நரசிம்ஹ விஷயம்.

**ச**ங்கல்ப சூர்யோதயம் என்கிற காவியத்திலே சுவாமி தேசிகன், "யார்







ஒரு நாட்டுப் பெண் வீட்டுக்கு வருகின்ற அதே ஆண்டில் மாமியார் காலமானதைக் கண்டு, "இந்தச் சனியன் வந்து மாமியாரை விழுங்கிவிட்டாள்" என்று சிலர் கூறுகின்றார்கள்.

ரயிலில் ஏறும்போதே இறங்கும் ஸ்டேஷனை நிச்சயப்படுத்தி டிக்கெட் வாங்கிவிடுவதைப் போல் ஓர் உயிருக்குப் பிறப்பதற்கு முன்னே இறப்பு நிச்சயமாகிவிடுகிறது.

ஆதலால் மருமகள் வந்ததற்கும் மாமியார் மாள்வதற்கும் சம்பந்தமே கிடையாது. மருமகள் மாமியாரை விழுங்கிவிட்டாள் என்று கூறுவது வடிகட்டிய மடமையாகும்.

நாம் அனுபவிக்கும் துன்பங்களுக்கு நம் வினை காரணமேயன்றி மற்றவர்கள் அல்லர். எவரையும் நோவாதே.

## வாரியார் அமுதம்

ஒருவர் அவதார ரகசியத்தை நன்கு உணர்கிறார்களோ அவர்கள் மறுபடியும் பூமியில் பிறப்பதில்லை; எம்பெருமானுடைய திருவடியை அடைந்து அந்த வானிலவரசிலே திருவடி கைங்கர்யம் - நித்ய கைங்கர்யம் - என்கிற உயர்ந்த புருஷார்த்தத்தைப் பெற்று பகவானை அனுபவிக்கக் கொடுத்து வைத்தவர்களாக ஆகிறார்கள்" என்கிறார்.

இந்த உலகத்திலே வாழும்போது பகவான் பல அவதாரங்கள் பண்ணியிருக்கிறான், பூர்வத்திலே (பழைய காலத்திலே). அந்த அவதாரங்களையெல்லாம் நாம் நன்கு சிந்தனை பண்ண வேண்டும். நன்கு உணரவேண்டும். அப்படி உணரக்கூடியவன் மேம்பட்டவன் என்கிறது வேதம்.

அந்த எம்பெருமானுடைய பிறப்பின் ரகசியத்தை புத்திமான்களுக்குள்ளே உயர்ந்தவர்களாக இருக்கக் கூடியவர்கள் நன்கு உணர்கிறார்கள். ஞானிகள், மஹான்கள் நன்கு உணர்கிறார்கள். எப்படி உணர்கிறார்கள் என்று கேட்டால், இவ்வண்ணம் உணர்கிறார்கள்.

அஜாயமான: என்றும் பஹுதா விஜாயதே என்றும் உணர்கிறார்கள்.

அஜாயமான : என்றால் பிறப்பற்றவன் என்று அர்த்தம். பஹுதாவிஜாயதே என்றால் பலபடியாகப் பிறக்கிறான் என்று பொருள். இது முன்னுக்குப் பின் முரணாக இருக்கிறது பாருங்கள்.

'பிறப்பற்றவன்' என்று சொல்ல வேண்டும். இல்லாவிட்டால் 'பலபடியாகப் பிறக்கிறான்' என்று சொல்ல வேண்டும். இரண்டையும் சொன்னால் அது எப்படிப் பொருந்தும்? வேதம் அவ்வாறு சொல்லுமா? அதுவும் புருஷ சூக்தத்திலே சொல்லப்பட்ட வார்த்தை அது!

பிறப்பற்றவன் என்றும் பலபடியாகப் பிறக்கிறவன் என்றும் ஞானிகள் உணர்கிறார்கள் என்றால் பிறப்பற்றவன் என்ற சொல்லுக்கு என்ன பொருள்? பலபடியாய்ப் பிறக்கிறான் என்பதற்கு என்ன பொருள்?

'பகவானுடைய அவதாரம் இருக்கிறதே, அது நம்மைப் போன்ற பிறப்பல்ல...' என்று அந்த வாக்கியத்துக்குப் பொருள்.

பலபடியாகப் பிறக்கிறான் என்றால், நம்முடைய பிறப்புக்கு என்னவெல்லாம் காரணமுண்டோ அதெல்லாம் பகவானுக்குக் கிடையாது. அவன் சங்கல்ப மாத்திரத்தினாலே, எப்போதெல்லாம் பிறக்க வேண்டும் என்று நினைக்கிறானோ அப்போதெல்லாம் வந்து பிறக்கிறான்! 'நீ ஏன் பிறந்தாய்?' என்று அவனைக் கேட்க முடியாது! 'ஏன் பிறக்கவில்லை?' என்றும் கேட்க முடியாது.

(வளரும்)



# 18

> 1955-ம் ஆண்டு அற்புதமான நடனங்களைக் கொண்டு புகழ்மிக்க இயக்குநராய் விளங்கிய வி.சாந்தாரம் இயக்கிய 'ஜனக் ஜனக் பாயல் பாஜே' என்ற படம்தான் இந்தியாவின் முதல் கலர் படமாகும்.
>
> - 'உலக சினிமா'

எங்களைப் பார்த்ததும் பி.டி. மாஸ்டரும் அரண்டு போனார். பள்ளிக்கு மட்டம் போட்டுவிட்டு, ஷூட்டிங் பார்க்கும் இடத்தில் ஆசிரியரும் மாணவரும் சந்தித்துக் கொண்டால் அதிர்ச்சியாக இருக்காதா பின்னே...

அதற்குள் சினிமா ஷூட்டிங்கில் ஒரு அதிசயம் நிகழ்ந்தது. சிவாஜி ஓட்டிச் சென்ற வண்டியை விரட்டிச் சென்ற அடியாட்களின் வண்டிகள் மின்னல் வேகத்தில் அவர் வண்டியைத் தாண்டிக்கொண்டு மதுரை செல்லும் சாலையில் மிக விரைவாகச் செல்லத் தொடங்கின.

அவர்கள் ஒருவரையொருவர் ரேஸ் வண்டி முந்திச் செல்வது போல் 100 கி.மீ. வேகத்தில் விரைந்து கொண்டிருந்தனர். தன்னை விரட்டிக்கொண்டு யாரும் வராததால் என்ன செய்வது என்று தெரியாமல் சிவாஜி யோசித்து வண்டியை நிறுத்த, அதற்குள் ஒரு காரை எடுத்துக்கொண்டு சில உதவியாளர்கள் அந்த வண்டிகளை மறிக்க, ஒரே ரகளையாயிற்று.

பிறகு ஒரு யோசனை செய்தார்கள். அதாவது கதாநாயகன் (சிவாஜி) ஓட்டும் வண்டியில் இருந்த மாடுகளைக் கழற்றிவிட்டு, அதை அப்படியே ஒரு வேனின் பின்பக்கம் உறுதியாகக் கட்டினார்கள். இப்போது கேமரா வேனுக்கு மேலே அங்கிருந்து பார்த்தால், சிவாஜி, ஜெயலலிதா, வண்டிச் சக்கரங்கள் இவை மட்டும்தான் தெரியும்.

அடுத்த விநாடி வேன் சீறிக்கொண்டு கிளம்ப, கதாநாயகன், நாயகி வண்டி 'உடன்போக்கு' போக (தமிழ் இலக்கியத்தில் உடன்போக்கு என்றால் காதலன், காதலி இருவரும் ஓடிப்போதல்), அவர்களைத் துரத்தும் வண்டிகள், மாடுகள் அந்த வேகத்துக்கு ஈடுகொடுக்க முடியாமல் பின்தங்க, ஒரு வழியாக கதாநாயகன்,

படம் : புதூர் சரவணன்

சினிமாவுக்குப் போகலாம் வாங்க!



கதாநாயகியை அன்றைக்கு மாலைக்குள் கடத்தி முடித்தார்.

ஷூட்டிங் முடிவதற்குள் எல்லோரும் சிவாஜிகணேசன் அவர்களின் அருகில் சென்றோம். அவர் எங்களையெல்லாம் அன்போடு பேர் கேட்டார். நான் என் தாயாரிடம் சொன்னது பொய்யாகவில்லை. அதுமட்டுமல்ல... பல ஆண்டுகள் கழித்து நடிகர் திலகம் தலைமை தாங்க, அவர் இருந்து கேட்க-நான் ஒரு மணி நேரம் பேச, அவர் மிக மகிழ்ந்து சிரித்ததோடு என்னையும் என் குடும்பத்தாரையும் பாராட்டவும் செய்தார்.




நடிகர் திலகம் சிவாஜிகணேசன் அவர்களைப் பார்த்ததும், பேசியதும் கனவு போலவே எனக்குத் தோன்றியது. பிற்காலத்தில் பேச்சுத் துறையில் நான் பேச்சாளனாக வளர்ந்து வந்த காலத்தில் ஒரு அற்புதமான சம்பவம் நிகழ்ந்தது.

சென்னை கமலா தியேட்டரின் உரிமையாளரும், மதுரை மீனாட்சியம்மன் கோயிலின் முன்னாள் தக்காரும், சிறந்த நகைச்சுவையாளருமான வி.என். சிதம்பரம் அவர்களின் மகன் திருமணம், அவரது சொந்த ஊரான இராங்கியத்தில் 1996-ம் ஆண்டு நடைபெற்றது.



அந்த விழாவில் பங்கேற்க நடிகர் திலகம் வந்திருந்தார். வி.என்.சிதம்பரம் என்னை விழாவுக்கு அழைத்து சிவாஜி கணேசன் முன்னிலையில் பேசும் வாய்ப்புத் தந்தார். நடிகர் திலகம் அப்போது அமெரிக்காவில் சிகிச்சை முடிந்து வந்திருந்ததால் சற்று பரபரப்பாகக் காணப்பட்டார். விரைவில் நிகழ்ச்சியை முடித்துவிட்டு சென்னை செல்லும் அவசரம் அவரது முகத்தில் காணப்பட்டது.

சிதம்பரம் என்னை அவரிடத்தில் அறிமுகம் செய்து வைத்தார். நடிகர் திலகம் அவர்கள் என் சந்திப்பில் அதிக ஆர்வம் காட்டியதாகத் தெரியவில்லை.

''இப்ப வாழ்த்துக் கூட்டம் நடைபெறப் போகுது. நீங்க தலைமை தாங்கணும். அய்யா பேசுவாரு'' என்று தயங்கித் தயங்கி சிவாஜியிடம் சொன்னார் சிதம்பரம். ''ஏன், சாப்பாடு போடுறது போதாதுன்னு இதுவேற தண்டனையா? அதுக்கெல்லாம் நேரமில்லை'' என்று சொன்ன நடிகர் திலகம், என்னை அருகில் அழைத்து தன் சட்டைப் பையில் இருந்த தங்கச் சங்கிலியுடன் கூடிய வட்டமான சிறிய கடிகாரத்தை எடுத்தார் (அந்தக் கால காந்தி தாத்தா கடிகாரம் மாதிரி இருந்தது அது).

''இதப்பாருங்க, மணி காலை பதினொண்ணு. நீங்க ஒரு பத்து நிமிடம் மட்டும்தான் பேசணும் சரியா?' என்று தன் சிவந்த விழிகளை உருட்டியபடி கேட்டார்.

மனோகரனாக, கட்டபொம்மனாக,

கு.ஞானசம்பந்தன்

கப்பலோட்டிய தமிழனாக, வீர சிவாஜியாக காட்சி தந்த அவரது முகத்தைப் பார்த்து மெய்மறந்த நான்,

''அப்படியே செய்கிறேன்'' என்றேன்.

''நான் மேடைக்கெல்லாம் வரமாட்டேன். முன் வரிசையில், இல்லை இரண்டாவது வரிசையில் உட்கார்ந்துதான் கேட்பேன்... ம் கூட்டம் தொடங்கட்டும்'' என்றார்.

சிதம்பரம் என்னிடத்தில் வந்து ''அவரை அமெரிக்காவிலிருந்து



• அந்த விழாவில்...

வரவழைத்ததே பெரிய விஷயம்... இனி உங்க பேச்சுத்தான் அவரை மேடைக்கு அழைக்கணும்'' என்று மெதுவாகச் சொல்லிவிட்டு கூட்டத்தில் சென்று அமர்ந்து கொண்டார்.

நான் பேசத் தொடங்கினேன். ''நான் என் தந்தையாரிடத்தில் கற்ற தமிழைக் காட்டிலும், என் ஆசிரியர்களிடத்தில் கற்ற தமிழைக் காட்டிலும் நீங்கள் பேசிய தமிழில் இருந்துதான் அதிகம் கற்றேன்'' என்று ஆரம்பித்தவுடன் நடிகர் திலகம் சற்று நிமிர்ந்து உட்கார்ந்தார்.

பிறகு, அவர் நகைச்சுவை மிளிர நடித்த படங்களான 'கல்யாணம் பண்ணியும் பிரம்மச்சாரி', 'சபாஷ் மீனா', 'கலாட்டா கல்யாணம்' போன்ற படங்களில் இருந்து சரமாரியாக நகைச்சுவைக் காட்சிகளை எடுத்துச் சொல்லச் சொல்ல மிகமிக சந்தோஷமாக தன் சிம்மக்குரலில் சிரித்தததோடு, தன் பக்கத்தில் உட்கார்ந்திருந்தவரையும் 'படார்... படார்' என்று முதுகில் அறைந்து சிரிக்கத் தொடங்கினார்.

அந்த அடிவாங்கிய நண்பர், இன்றைக்கும்கூட 'நான் நடிகர் திலகத்திடம் அடிவாங்கியவன்' என்று பெருமையாகச் சொல்லிக்கொண்டு திரிகிறார்.

நான் பேசத் தொடங்கி நாற்பது நிமிடங்கள் ஆனபோதும் நடிகர் திலகம் என் பேச்சை நிறுத்தச் சொல்லவில்லை. ஒரு சாதாரண ரசிகனைப் போல அவர் சிரித்தது எனக்கு மிக வியப்பாக இருந்தது.

பேச்சுக்கு இடையில் சிதம்பரம் அவர்கள் 'சாப்பிடப் போகலாமா?' என்று இலேசாகக் கேட்க, ''இருய்யா... தினமும்தான் நாலு வேளை சாப்பிடுறோம்ல. பேச்சைக் கேட்க விடுங்கைய்யா'' என்று சொல்லியிருக்கிறார் நடிகர் திலகம்.

பேச்சு முடிந்ததும் அவரே மேடைக்கு வந்து என் கைகளைப் பிடித்துக்கொண்டு சந்தோஷமாகக் குலுக்கத் தொடங்கினார். எனக்குச் சால்வையும் அணிவித்தார். பிறகு வி.என். சிதம்பரத்தையும் அழைத்துப் பாராட்டத் தொடங்கினார். கமலா அம்மையார் என்னிடத்தில் ''எங்க மாமா (சிவாஜி) இப்படி வாய்விட்டுச் சிரிச்சதைப் பார்த்து ரொம்ப நாளாச்சு. நீங்க நல்லா இருக்கணும்'' என்று வாழ்த்தினார்.

பிறகு அவர்களோடு உணவு உண்டு, அவர்களோடே மதுரைக்கு காரில் வந்து, பிரிய மனமில்லாமல் விடைபெற்று வீடு வந்து சேர்ந்தது எல்லாம் சினிமா போலவே நினைவுக்கு வந்துவந்து போயின.

*(ரீல் சுற்றும்)*



*படைப்பாளிகளே! வாசக எழுத்தாளர்களே! நீங்கள் அனைவரும் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் சிறுகதைப் போட்டி வந்தேவிட்டது!*

**முதல் பரிசு - ரூ.10,000**

**இரண்டாம் பரிசு - ரூ.7,500**

**மூன்றாம் பரிசு - ரூ.5,000**

தவிர, பிரசுரத்துக்குத் தேர்வாகும் ஒவ்வொரு கதையும் ரூ.**500** சன்மானம் பெறும்.

யார் வேண்டுமானாலும் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் எழுதலாம் என்றாலும் எழுதுபவர் முப்பத்தைந்து வயதுக்குட்பட்டவராகவோ அல்லது அறிமுக எழுத்தாளராகவோ இருந்தால் சிறப்புப் பரிசு உண்டு. மற்ற நிபந்தனைகள் வழக்கமானவை.

**விதிமுறைகள்:**

- கல்கியில் 4 பக்கங்களுக்கு மிகாமல் இருப்பது நல்லது.
- சொந்தக் கற்பனைதான் என்பதற்கு உறுதிமொழிக் கடிதம் வேண்டும். அது இல்லாத கதைகள் பரிசீலிக்கப்படமாட்டா.
- அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லையென்றும், போட்டி முடிவு வெளியாகும் வரை எழுதுவதில்லை என்றும் உறுதிமொழி தர வேண்டும்.
- படைப்பாளி முப்பத்தைந்து வயதுக்குட்பட்டவராக இருந்தால் அதற்கான ஏதாவதொரு அத்தாட்சி (பத்தாம் வகுப்பு டி.சி - ஜெராக்ஸ் போன்றவை) கண்டிப்பாக இணைக்கப்பட வேண்டும்.
- முழு வெள்ளைத்தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத வேண்டும்.
- தேர்வாகாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய தபால் தலைகள் ஒட்டிய அஞ்சல் உறை இணைக்கப்பட வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- போட்டிக்கு அனுப்பும் கதையை, முடிவுகள் வெளியாகும்வரை வேறு இதழுக்கோ, இணையதளத்துக்கோ, போட்டிக்கோ அனுப்பக்கூடாது.
- பரிசுக்குரிய கதைகளை நடுவர் குழு பரிசீலித்துத் தேர்ந்தெடுக்கும். சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.
- முடிவு வெளியாகும்வரை, எவ்வித கடிதப் போக்குவரத்தோ, தொலைபேசி விசாரிப்புகளோ கூடாது.
- **'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி - 2006'** என்று உறையின் மேல் தவறாமல் குறிப்பிட்டு, அனுப்ப வேண்டிய முகவரி:

**ஆசிரியர், கல்கி, கல்கி பில்டிங்ஸ்,**
**47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032**

- கதைகள் வந்து சேரக் கடைசித் தேதி : ஜூன் 15
- போட்டி முடிவும் முதல் பரிசுக்கதையும் ஆகஸ்ட் 6 ஆண்டு மலரில் வெளியாகும்.

*படைப்பாளிகள், வாசக எழுத்தாளர்கள் அனைவரும் உற்சாகத்துடன் கலந்துகொண்டு சிறப்பிக்க அழைக்கிறோம்.*

**- ஆசிரியர்**

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி 2006

# ஆர்த்தியின் காதலன்!

## செண்பகக்கண்ணு

'ஏங்க... இன்னிக்கு பேப்பர் பார்த்தீங்களா? இந்த வாட்டி ப்ளஸ்டூ எக்ஸாம்ல ஸ்டேட் ஃபர்ஸ்ட் வாங்கியிருக்கிறது எந்த ஸ்கூல் தெரியுமா? உங்க கிராமத்துப் பக்கத்துல இருக்கிற இடைகால் ஸ்ரீ மீனாட்சிநாத ஞாபகார்த்த மேல்நிலைப் பள்ளிங்க! எத்தனை டவுன் ஸ்கூல்ல ஸ்பெஷல் கிளாஸ், நைட் ஸ்டடின்னு உசுரைக் கொடுத்து பயிற்சி கொடுக்கறாங்க! ஆனா எங்கயோ..." கோமதி அவளின் வழக்கமான சத்தத்தில் சொல்லிக்கொண்டே போகிறாள்.

எனக்கோ மீண்டும் அதே பள்ளியில் ட்வல்த் 'ஏ' கிளாஸ் மூணாவது பெஞ்சில், நான்காவதாக அமர்ந்து படிக்க மனசு துடிக்கிறது. எத்தனை அருமையான காலங்கள்! நினைக்க நினைக்கத் திகட்டாத நினைவு வருடல்கள்...

"டேய், பெரிய டவுன் ஸ்கூல்ல உன்னைச் சேர்க்கப் போறதுல்ல. கிராமத்து கோட்டா ஸீட் கெடைக்கணும். பேசாம இடைகாலிலே படி...' பேங்க் கிளார்க்கானாலும் பேமண்ட் ஸீட்டில் படிக்கக்கூடாது என்ற கொள்கைப் பிடிப்புள்ள அப்பா சொன்னபோது என்னால் மறுக்க முடியவில்லை. புலிவேஷம் போட்டது போல் பொருந்தா யூனிஃபார்மில் வகுப்புக்குள் நுழைந்ததும் ஆறுமுகம் சார் என்னை ஏற இறங்கப் பார்த்தவர் 'நல்லா தண்ணிக்குப் பஞ்சமில்லாம நெடுநெடுன்னு வளர்ந்திருக்கிற! ஏற்கெனவே மூணாவது பெஞ்சல நெடுஞ்செழியன்கள் நிறைய பேரு இருக்காங்க. அவங்களோடு போய் உட்காருப்பா..!' என்றார்.

சோர்வோடு அமர்ந்த நான் அதே வரிசையில் சற்றே வளர்ந்த கேர்ள்ஸ் இருந்த எதிர் திசையில் பார்த்தேன். கிராமத்து ரெட்டைச் சடைகளுக்கு நடுவே சற்றும் பொருந்தா விதத்தோடு, 'பாப்'வெட்டப்பட்ட முடியோடு ஒரு பெண். யாரோ என்பதற்குள் 'யார் நீ?' என்பது போல் அவள் பார்த்தாள். வகுப்பு முடிந்த பின்னும் என் குழப்பம் தீரவில்லை.

'எங்க பிராஞ்ச் மேனேஜர் பொண்ணு அங்கதான் சேர்ந்துருக்காளாம்! புதுசா மாற்றலாகி வந்தவரு, எங்க சேர்க்கிறதுன்னு யோசிச்சப்ப எல்லோரும் கையைக் காண்பிச்சது அந்த ஸ்கூலைத் தானாம்!"

என் வினாவுக்கு விடையை அப்பாவே தந்ததால் அமைதியானேன். இதன் பின் வந்த நாட்கள் இனிமையானவை. எல்லோருக்கும் முன்பாகவே சென்று அவள் வருகையை எதிர்பார்த்து நகம் கடித்தேன்.

ஆர்த்தி பெயருக்கேற்றவாறு நேர்த்தியாய் இருந்தாள். அங்கு பயின்ற கிராமத்துப் பெண்களுக்கு அவள் தேவதையாய்த் தெரிந்தாள். அவள் மையில்லை என்று பேனாவை உதறினால் தங்கள் பேனாவைக் கொடுக்க போட்டி போட்டார்கள் பென்சில் சீவித் தருவது, ஸ்டேஷனரி கடையில் நோட்டு வாங்கிக் கொடுப்பது

எல்லா உதவிகளையும் செய்ய அனு மனாகவே பலபேர் காத்திருந்தனர்.

'ரமேஷ்' கொஞ்சம் பெண் ஜாடையில் இருப்பான். கேர்ள்ஸ் எல்லோருமே அவனிடம் சகஜமாய்ப் பழகினாலும் ஆர்த்தி கூடுதலாகவே ஒட்டினாள். மேத்ஸ் எனக்கு விருப்பப் பாடம். எனவே என்னுடைய ஹோம் ஒர்க் நோட் ரமேஷ் மூலமாகப் பெண்களிடம் பரிமாறப்படும். சில சமயம் ஆர்த்தியின் கையில் என் நோட்புக் இருக்கும். ஏதோ நானே அவள் கையில் தவழ்வது போல் சந்தோஷமா யிருக்கும். ஒரு தடவை வீட்டுக்கு எடுத்துச் சென்றவள் குற்றுயிரும் குலையுயிருமாய் இருந்த என் நோட்டுக்கு வழுவழுப்பான காக்கி அட்டை போட்டு ரமேஷ் மூல மாகக் கொடுத்தனுப்பினாள். தற்செயலாக தலை தாழ்த்திப் பார்த்த என் முகம் பார்த்துச் சிரித்தாள். இல்லை கொன் றாள்!

'இதயமாடா... நீயெல்லாம் ஆர்ட்ஸ் குரூப் எடுத்துப் படிக்க



வேண்டியதுதானடா... சிலந்தி வலை மாதிரி வரைஞ்சுருக்க...' ப்ராக்டிகல் நோட்டை வேல்சாமி சார் முகத்தில் விசிறியடித்தார். மதிய உணவுக்காக வெளியே சென்று வருவதற்குள் என் ப்ராக்டிகல் நோட்டில் ஆர்த்தியின் இதயம் சிரித்தது. ரமேஷால் நோட்டுக் கைமாறி, ஆர்த்தியால் இதயம் ஜொலித்தது.

யாருமே தைரியம் ஊட்டாமல் என் காதல் மரம் கிளை விட்டு வளர்ந்தது. அழகான காதல் கவிதை ஒன்றை இரவெல்லாம் விழித்திருந்து எழுதினேன்.

மறுநாள் ரமேஷிடம் கொடுத்தபோது கொஞ்சம் தயங்கினான். ஏற்கெனவே பல பேருக்கு காதல் பரிமாற்றம் செய்ததால் அவனுக்கு தபால் பெட்டி 'ரமேஷ்' என்றே பெயர் உண்டு.

இதன்பின் அடிக்கடி அவனிடம் லெட்டர் கொடுத்தனுப்பினேன். 'ஏதாவது பதில் சொன்னாளாடா ரமேஷ்?' என்றபோது, 'ஒன்னுமே சொல்லலைடா. பேசாம சிரிச்சுக்கிட்டே வாங்கிக்கிட்டா... அவ்வளவுதான்' அப்பாவியாய் ரமேஷ் சொல்வான்.

'ஆர்த்தி இதில் வரையப்பட்டுள்ள 'குச்சி தாஜ்மஹால்' தினமும் நீ மரத்தடியில் ரசித்துத் தின்று போடும் ஐஸ் குச்சிகளைப். பத்திரப்படுத்திச் செய்தது. பதிலைத் தாமதப்படுத்தினாலும் என் மேல் காதல் இல்லை என்று சொல்லி விடாதே.'

ஐஸாய் நான் உருகி எழுதினாலும் எஃகு மனம் கொண்டவளாய் பதில் தரவில்லை ஆர்த்தி.

'இது என் இருபத்தைந்தாவது கடிதம். இது இறுதியாகவும் இருக்கலாம் ஆர்த்தி! மஞ்சள் பழங்களில் வைட்டமின் 'A' உள்ளது. பருப்பு வகைகளில் வைட்டமின் 'B' உள்ளதாம். நெல்லிக்கனியில் 'C'யாம். சூரிய ஒளியில் வைட்டமின் 'D' உள்ளதாம். ஆனால், உன் பார்வையில் அத்தனை வைட்டமினும் மொத்தமாய் உள்ளது ஆர்த்தி!

நீ ஆமென்றால் உலகம் என் கையில்!

இல்லை என்றால் சாவின் கையில் நான்!'

ரமேஷிடம் கொஞ்சம் இறுக்கமான முகத்தோடே கொடுத்தனுப்பினேன்.

**ம**றுநாள் காலை சமையலறையில் அப்பா தழுதழுத்த குரலில் அம்மாவிடம் பேசிக் கொண்டிருந்தார். என் பெயர் அடிபடவே மறைந்து நின்று கேட்டேன்.




*"கூ.உ.க. அப்படின்னு புதுக்கட்சி ஆரம்பிச்சிருக்கீங்களாமே?"*

*"ஆமா, கூட்டணிகளால் உதறப் பட்ட கட்சிகள் கழகம்னு பேரு."*

*- செந்தில்குமார்*

"சரோ, ஆபீஸ் முடிஞ்சவுடனே மானேஜர் கூப்பிட்டு, 'மிஸ்டர் துரைசாமி! இதெல்லாம் உங்க பையன் ராஜா எம்பொண்ணுக்குக் கொடுத்த லவ் லெட்டர்ஸ். தினம் அவன் கொடுக்கிற அத்தனை லெட்டர்ஸையும் எம்பொண்ணு அப்படியே கொடுத்துடுவா! படிச்சுட்டு சிரிச்சுக்குவேன். ஆனா நேத்து கொடுத்த லெட்டர் கொஞ்சம் சீரியஸா இருந்ததாலதான் உங்ககிட்ட சொல்ல வேண்டியதாப் போச்சு! இதுக்காக பையனை தாம் தூம்னு அடிச்சுடாதீங்க. பக்குவமா பேசி அவன் தவறை உணர்த்துங்க! எம் பொண்ணு ஆர்த்தி சென்னையில எய்த் படிக்கிறப்ப யாரோ ஒரு முரட்டுப் பையன் லெட்டர் கொடுத்ததா வந்து கண்கலங்கி நின்னா. தவிச்சுப் போனாலும் அப்ப அவகிட்ட நான்

சொன்ன வழக்கத்தை இப்பவும் கடை பிடிக்குறா. 'ஆர்த்தி அவன் எத்தனை லெட்டர் கொடுத்தாலும் முகம் சுளிக்காம வாங்கிட்டு வந்து அப்பாகிட்ட கொடுத்துடு. திட்டியோ, திமிறியோ நீ பேசினாத்தானே அவன் எதிர்மறையா செயல்படுவான். கொடுத்ததெல்லாம் வாங்கிக்கிட்டா அவனும் ஓய்ஞ்சு போயிடுவான். அப்புறம் அவனே முகம் திருப்பிக்குவான்'னு சொன்னேன். அதே மாதிரித்தான் உங்க பையனோட லெட்டரையும் கொடுத்தா...'ன்னு சொன்னார்.

சரோ... நான் இந்தப் பயலுக்கு என்ன குறை வைச்சேன்? இவனுக்கு அடுத்து தூணா மூணு பேரு. இவன் தடு மாறிட்டா மத்தவங்களுக்கும் தடம் மாறிடாதா... மானேஜர் சார் சொன்னது



''தலைவருக்கு எதை தேர்தல் வாக்குறுதியா குடுக்கணும்னு தெரியல!''

''என்ன விஷயம்?''

''நாங்கள் ஆட்சிக்கு வந்தால் இலவச திருட்டு வி.சி.டி தருவோம்னு அறிவிச்சுருக்காரே!''

– அம்பை தேவா

போல இவனுக்கு அடி உதையெல்லாம் நான் கொடுக்கப் போறதில்ல. இன்னியிலிருந்து அவங்கிட்ட பேசப் போறதில்ல... எந்தச் சந்தர்ப்பத்திலும் இதை மாத்திக்க மாட்டேன்! என்னிக்கு அவன் நல்லாப் படிச்சு ஒரு வேலைக்குப் போயி செட்டிலாகுறானோ அப்ப அவங்கிட்ட பேசுவேன். இதை நீயே சொல்லிடு....'' அப்பா பேசி முடித்தபோது மார்புக்கூடு மேலும் கீழும் ஆடியது. எனக்குப் பாவமாய் இருந்தது.

தோளுக்குமேல் வளர்ந்தபின்கூட கடைவீதி போகும்போது அப்பாவின் தோள் மீது கை போட்டு பல கதைகள் பேசிச் சிரித்து உலாப் போகும் நான், அப்பாவின் இந்த வீறாப்பால் அதிகமாய்ச் சிதைந்து போனேன்.

ஆர்த்தியின் காதல் இழப்பு, அப்பாவின் அன்பு இழப்பு எல்லாம் என்னை படிப்பின் பக்கம் முட்டித் தள்ளியது.

வருடங்கள் உருள, அண்ணா யூனிவர்சிட்டியில் இன்ஃபர்மேஷன் டெக்னாலஜி படித்து கேம்பஸ் இண்டர்வியூவில் செலக்ட் ஆகி வேலையில் அமர்ந்து அப்பாவைப் பார்க்கப் போன போது சொன்னது போல் கட்டிப் பிடித்து அழுதார். ஐந்து வருட அன்பு இழப்பு கண்ணீரில் கரைந்து காணாமல் போனது. அப்பா சொன்ன அவரின் நண்பர் மகள் கோமதியையே கைப் பிடித்தேன்.

**'எ**ன்னங்க! பாருங்க இந்த அநியாயத்தை. அஞ்சாங்கிளாஸ் படிக்கிற நம்ம மகிஷாவுக்கு அவ கிளாஸ் பையன் சேகர் கொடுத்துருக்கிற லவ் லெட்டர்... முளைச்சு மூணு எல விடல...' கோமதியின் ஆக்ரோஷ பேச்சு என் செவியில் விழ, நடப்பு உலகுக்கு வருகிறேன்.

''சரி சரி நீ வுடு... இங்க வாடா மகிஷா.. அழாத செல்லம். சேகர் உங் கிளாஸ் மேட்... க்ளோஸ் ஃப்ரெண்ட்... ரைட்டா... ஏதோ தெரியாம செஞ்சிருப்பான். இன்னிக்கு மட்டும் இல்லடா, எப்ப யாரு இது மாதிரி லெட்டர் கொடுத்தாலும் சிரிச்சுக்கிட்டே வாங்கிக் கோடா. அப்படியே அப்பா கையில கொடுத்துடணும். சரியா...''

''சரிப்பா...'' என் மகள் மகிஷா தலையாட்ட, ஒரு தவறு சரிசெய்யப் பட்டதாகவே எனக்குத் தெரிகிறது. ○

# அரட்டை அரங்கம் அடங்கிப்போன கதை!

அ.தி.மு.க.வில் ஐக்கியமான பிறகு விசு பயங்கர பிஸி. இரண்டாம் கட்ட பிரசாரத்துக்குக் கிளம்ப விருந்தவரைச் சந்தித்தோம்.

"அரட்டை அரங்கம் எனக்கு சந்தோஷத்தைக் கொடுத்தது. பணத்தைக் கொடுத்தது. புகழைக் கொடுத்தது. திருப்தியைக் கொடுத்தது. ஆனால் சேலத்தில் படப்பிடிப்பின்போது எதிர்பாராமல் ஒரு விவாதம் நடந்து, அதில் நான் தேர்தலில் நிற்கிறேன் என்று சொல்லிவிட்டேன். இது அவர்களுக்குப் பிடிக்கவில்லை. அதற்கு அப்புறம்தான் அவ்வப்போது பிரச்னைகள் ஏற்பட்டன" என்று எடுத்தவுடனே வெடித்தார் விசு.

"விசுவைப் போன்ற நல்லவர்கள் கண்டிப்பாக அரசியலுக்கு வரவேண்டும்' என்கிற மாதிரியான ஒரு இமேஜ் எனக்கு ஏற்பட்டதை அவர்களால் சகித்துக் கொள்ள முடியவில்லை. நானே சுயதம்பட்டம் கூடாது என்று பல விஷயங்களை கட் பண்ணிவிட்டுத்தான் ஒளிபரப்புக்கு கேசட்டைத் தருவேன். ஆனாலும், அவர்கள் அவ்வப்போது தங்கள் கைவரிசையைக் காட்டி விடுவார்கள். அரட்டை அரங்கத்தில் சுட்டிக் காட்டப்படும் பிரச்னைகள், உடனடியாக அரசாங்கத்தால் தீர்த்து வைக்கப்படுகிறபோது, அதனைக் காட்டுவதற்குத் தடை. சுனாமி வந்தபோது, விசு என்கிற தனி மனிதன், தன்னுடைய சுய சம்பாத்தியத்திலிருந்து இரண்டு லட்ச ரூபாயை முதலமைச்சரின் நிவாரண நிதிக்குக் கொடுத்தபோது, இவர்கள், 'என்ன அங்கே போய் கொடுத்திட்டீங்க? இங்கேதானே கொடுத்திருக்கணும்?' என்று கேட்டார்கள். இப்படியே போனால், ஒரு கட்டத்தில் இவர்கள் தி.மு.க. உறுப்பினர் அட்டையை என் கையில் திணித்து விடுவார்களோ என்ற பயம் எனக்கு வந்துவிட்டது. நானும், 'இவர்களுடன் இனி ஒன்றும் வேண்டாம்' என முடிவெடுத்து, எனக்குப் பிடித்த அரசியல் கட்சியான அதி.மு.க.வில் சேர முடிவெடுத்து இருப்பதையறிந்து, 'சீட்டு வேணும்னா அங்க ஏன் போகணும்? எங்ககிட்ட ஒரு வார்த்தை சொல்லியிருந்தா இங்கேயே கொடுத்திருப்போமே!' என்று சொன்னார்கள். நான் கேட்கிறேன் 'தி.மு.க.வில் யாருக்கு சீட்டு தருவது என்பதை கட்சி முடிவு செய்கிறதா? சன் டி.வி. முடிவு செய்கிறதா?'" என்றவர், சற்று இடைவெளி விட்டுத் தொடர்ந்தார்...

"நான் பணம் வாங்கினேன் என்பதெல்லாம் தவறான செய்தி. இந்த விசு பொய் சொல்ல மாட்டான். ஒரு விஷயம் சொல்லட்டுமா? நான் அ.தி.மு.க.வில் சேர்ந்திருக்கிறேன். ஆனால், அரசாங்கத்தில் சம்பளம் பெறும் எந்தப் பதவியையும் முதலமைச்சரே கட்டாயப்படுத்திக் கொடுத்தாலும் நான் ஏற்றுக்கொள்ள மாட்டேன். எம்.எல்.ஏ., எம்.பி. பதவிகளுக்குப் போட்டிபோட மாட்டேன். இதை எழுதி வைத்துக் கொள்ளுங்கள்" என்று தழுதழுத்தார் விசு.

- கௌதம்ராம்




# தண்ணி காட்டுமா... ...வன்னியர் வாக்கு?

### 'கை' தூக்கிவிடும் தேர்தல் அறிக்கை!

செய்யாறு தொகுதியில் காங்கிரஸ் சார்பாகப் போட்டியிடுபவர் விஷ்ணு பிரஸாத். இவருக்கு இந்தத் தொகுதியில் உள்ள மேல்பட்டு கிராமந்தான் சொந்த ஊர். "அம்மா... கலர் டீ.வி. மறந்துடாதீங்க கைச்சின்னம்'' என்றவாறு கிராமம் கிராமமாக வோட்டு வேட்டையாடி வருகிறார். "இரண்டு ரூபாய்க்கு ஒரு கிலோ அரிசி, விவசாயிகள் கடன் அறவே ரத்து, கலர் தொலைக்காட்சி போன்ற தி.மு.க. வாக்குறுதிகள் மக்களிடம் மிக நன்றாகவே எடுபட்டிருக்கின்றன'' என்கிறார் விஷ்ணுபிரஸாத்.

"வட்டி, அபராத வட்டி எல்லாவற்றையும் அம்மா தள்ளுபடி செய்தாங்க. கரும்புக்கு டன் ஒன்றுக்கு ரூபாய் ஆயிரம் கொடுக்கிறாங்க. உழவர் பாதுகாப்பு திட்டம் அம்மா கொண்டு வந்ததுதான். மக்கள் தி.மு.க. வாக்குறுதிகளால் ஏமாற மாட்டார்கள்'' என்று சொல்கிறார் தொகுதியில் உள்ள கொர்காட்டூர் கிராமவாசியான சந்திரன். இங்கு அ.தி.மு.க. வேட்பாளர் பாவை ரவிச்சந்திரன். போட்டி கடுமையாகவே இருக்கிறது. வட மாவட்டத் தொகுதிகளில் தி.மு.க. தேர்தல் அறிக்கை, அடிமட்ட மக்கள் வரை சேர்ந்திருப்பது காங்கிரஸ் கையை பலப்படுத்தி இருக்கிறது.



* பொன்முடி

### தண்ணி காட்டுமா வன்னியர் வாக்கு?

பொதுவாகவே வட தமிழ்நாடு

பகுதிகளில் வன்னியர் செல்வாக்கு அதிகம். தி.மு.க.வும் ஒரு பலம் பொருந்திய சக்தி. 2001 தேர்தலில் அ.தி.மு.க.வுடன் பா.ம.க. கூட்டணியில் இருந்தபோதே வெற்றி பெற்றவர் பொன்முடி. இப்போது பா.ம.க.வும், தி.மு.க.



• பசுபதி

அணியில். கேட்க வேண்டுமா? வெற்றி தேவதை அட்வான்ஸாக சிரித்துக் கொண்டிருப்பது இப்போதே தெரிகிறது. "கடந்த ஐந்து வருடமாக எதிர்கட்சி எம்.எல்.ஏ.வாக இருந்தாலும் பொன்முடி நிறையவே செஞ்சிருக்கார்" என்கிறார் விழுப்புரம் தொகுதியில் உள்ள ஒட்டேரிப்பாளையம் கிராமத்தைச் சேர்ந்த ராஜேந்திரன்.

இவரை எதிர்த்து களத்தில் நிற்கும் பசுபதி, 'அய்யா'விடமிருந்து 'அம்மா'விடம் தாவியவர். 2001-ல் பா.ம.க. சார்பாக பொன்முடியை எதிர்த்தவர், இப்போது அ.தி.மு.க. வேட்பாளர். "வன்னியர்கள் எல்லோரும் பா.ம.க. என்று சொல்வது சரியல்ல. இந்தப் பகுதியில் கட்சியை வளர்த்ததில் எனக்கும் ஒரு பங்குண்டு. எனவே வன்னியர்கள் பெரும்பாலும் எனக்குத்தான் வோட்டுப் போடுவார்கள்" என்றார் பசுபதி. இருந்தும் தி.மு.க. கூட்டணி பலம், பொன்முடியின் தனி செல்வாக்கு தி.மு.க. அணி வெற்றி பெற்றால் அவர் அமைச்சர் என்பதாலும், மக்கள் ஆதரவு பொன்முடிக்குக் கூடுதலாகவே இருக்கிறது.

**தளர்ந்த சூரியன்!**
**தவிக்கும் மாம்பழம்!**

வைகோ - திருமா முன் வைக்கும் கலைஞர்

குடும்ப விவகாரங்கள், கிராமப்புற திருப்போரூர் தொகுதி படித்த இளைஞர்களால் பேசப்படுகின்றன. அ.தி.மு.க.வுக்குக் கொஞ்சம் செல்வாக்குள்ள தொகுதிகளில் திருப்போரூர் தொகுதியும் ஒன்று (அம்மாவின் சிறுதாவூர் பங்களா இந்தத் தொகுதியில்தான் உள்ளது). அ.தி.மு.க. சார்பில் களம் காணும் முன்னாள் எம்.எல்.ஏ. தனபாலுக்கு தனிப்பட்ட முறையிலும் தொகுதியில் செல்வாக்குண்டு. எனவே பா.ம.க. வேட்பாளர் மூர்த்தி கொஞ்சம் கடுமையாகவே போராட வேண்டியிருக்கிறது. தொகுதி பா.ம.க.வுக்குப் போய்விட்டதால் கடுப்பாகிப்போன உள்ளூர் தி.மு.க. தலைகள், கொஞ்ச காலம் ஒதுங்கியே இருந்தன. எல்லோரையும் சமாளித்து பிரசாரத்தை துவக்கியிருக்கிறார் மூர்த்தி.

• மலர்



"பா.ம.க.வுக்கு வன்னிய வோட்டுகள் கைகொடுக்கும்" என்கிறார் அரசு ஊழியரான ராஜாராம். "பொதுவாகவே தி.மு.க. அணிக்கு ஆதரவான அலை தமிழ்நாட்டில் வீசுகிறது. ஜெயலலிதாவின் சர்வாதிகார ஆட்சியை விரட்டியே தீருவது என்று மக்கள் உறுதி பூண்டிருக்கிறார்கள்" என்கிறார் மூர்த்தி. இருந்தும், கொஞ்சம்கூட அலட்சியமாக இல்லாமல் இவர் விழிப்புடன் உழைக்க வேண்டிய அவசியம் இருக்கிறது.

**அனைத்துக் கட்சி அன்பர்!**

"2004க்கு முன்னர் நடந்த விஷயங்களைப்

பற்றித்தான் தி.மு.க. அணியால் பேச முடியும். அதற்கு பாராளுமன்ற தேர்தலில் கணக்கு பார்த்தாகிவிட்டது. இப்போது புதுக்கணக்கு பார்க்க வேண்டிய நேரம். கருணாநிதி என்ன வாக்குறுதி கொடுத்தாலும் மக்கள் நம்ப மாட்டார்கள். ஆனால் அம்மா சொன்னால் நம்பு வார்கள்'' என்றார் உத்திரமேரூர் தொகுதி அ.தி.மு.க. தேர்தல் அலுவலகத்தில் நாம் சந்தித்த கங்காதரன். இந்தத் தொகுதியில் கைத்தறி துறை அமைச்சர் சோமசுந் தரம்தான் ஆளும்கட்சி வேட்பாளர். சாலை வசதி, பஸ் வசதி என்று பல நலப் பணிகளை மேற்கொண் டிருக்கும் இவருடைய மற் றொரு ப்ளஸ் பாயிண்ட், கட்சிப் பாகுபாடின்றி உதவி செய்வது. இதனால் எல்லாப் பகுதிகளிலும், எல்லா கட் சிப் பிரமுகர்களுடனும் நல்ல தோழமையுடன் இருக்கிறார். தி.மு.க. வேட் பாளரான சுந்தர், முழுக்க முழுக்க நம்பியிருப்பது கூட்டணி பலத்தையும், தி.மு.க.வின் வாக்குறுதிளை யும்தான். இதனால் இங்கே இலையின் கையே ஓங்கி இருக்கிறது.

* லட்சுமி



### ஆறுமுகம் Vs ஆறுமுகம் = இழுபறி

அ.தி.மு.க.வின் அசைக்க முடியாத ஆதரவாளர் களாக தாய்க்குலமே இருக்கின்றனர் என்பது இன்று வரை தொடரும் உண்மை. இது எம்.ஜி.ஆர். போட்டு வைத்த அஸ்திவாரம். செங்கல்பட்டு தொகுதியில் பாலாற்றை ஒட்டி உள்வாங்கிய கிராமம் எடை யாத்தூர். இந்தக் கிராமத்தில் நாம் சந்தித்த லட்சுமி என்ற பெண் "அம்மா மாதிரி தைரியமானவங்க யாரு சொல்லுங்க? அந்த இந்திரா காந்தி அம்மாவைவிட எங்கம்மா தைரியமானவங்க. அவங்களுக்குத்தான் என் வோட்டு'' என்றார். உத்திரமேரூர் தொகுதியில் நெடுங்கல் கிராமத்தில் பசு மாட்டுடன் போய்க் கொண்டிருந்த மலர் என்பவரை நிறுத்திக் கேட்ட போது "இந்த மாடுகூட சுயஉதவிக்குழு கடன்ல வாங்கினதுதான். நாங்க எப்பவும் எம்.ஜி.ஆர். கட்சிதாங்க'' என்றார் அதிரடியாக. "தாய்க்குலங்கள் மட்டுமல்ல, எல்லாத் தரப்பினரையும் அரவணைத்து ஆட்சி செய்பவர்தான் எங்கள் புரட்சித்தலைவி. 2004 பாராளுமன்ற தேர் தலின்போது பல கிரா மங்களில் எங்களால் போக முடியலை. இப் போது நிலைமை மாறி விட்டது'' என்கிறார் அ.தி.மு.க. வேட்பாளரான எஸ்.ஆறுமுகம். இவரை எதிர்த்து பா.ம.க.வில் நிற் பவர் பெயரும் ஆறுமுகம் தான். ஆனால் பா.ம.க. வேட்பாளரை திருக்கச் சூர் ஆறுமுகம் என்று தான் பரவலாகத் தெரி யும். எதிர்கட்சி எம்.எல்.ஏ. வாக இருந்ததால், தொகுதி யில் பல நலப்பணிகளை திருக்கச்சூர் ஆறுமுகம் செய்ய முடியவில்லை. அரசு நடத்திய நலத்திட்ட நிகழ்ச்சிகளுக்கும் அழைப்பு கொடுக்காத தால், அவரால் பல கிராமங்களுக்குச் செல்ல முடியவில்லை. இதுவே இப்போது இவருக்கு எதி ரான அதிருப்தியாக மாறி இருக்கிறது. "எம்.எல்.ஏ. எட்டிப் பார்க்கவில்லை'' என்று சொல்கிறார் நெரும்பூர் மணி. ஆனால் "இதுபோன்ற அதிருப்தி



* விச்சு இருப்பிரசாத்

யெல்லாம் தேர்தல் நெருக்கத்தில் மறைந்துவிடும். கூட்டணி பலத்தின் காரணமாக வெற்றிக் கனியைப் பறிப்பேன்'' என்கிறார் திருக்கச்சூர் ஆறுமுகம். எளிமைக்குச் சொந்தக்காரரான அ.தி.மு.க. ஆறுமுகமும் வன்னியராக இருப்பதால், போட்டி கொஞ்சம் கடுமைதான்.

## கொட்டும் முரசும் முந்தும் பழமும்!

இன்று தமிழகமே ஆர்வத்துடன் உற்று நோக்கும் தொகுதி விருத்தாச்சலம். தனது செல்வாக்கை இந்த வன்னிய பூமியில் சோதித்துப் பார்க்க வந்துவிட்டவர் விஜயகாந்த். இவரை எதிர்த்து பா.ம.க.வில் நிற்பவர் டாக்டர் கோவிந்தசாமி. தொகுதியில் இவர்மீது கொஞ்சம் அதிருப்தி இருக்கிறது. இங்கு இரட்டை இலை வேட்பாளர் காசிநாதன். ஆனால் விஜயகாந்தின் கொட்டு முரசு சத்தத்திலும், பா.ம.க.வின் மாம்பழம் ஏற்படுத்தும் பரபரப்பிலும் இலையைத் தேட வேண்டியதாக இருக்கிறது. பா.ம.க. தரப்பு இந்தத் தொகுதியை ஒரு கௌரவப் பிரச்னையாகவே எடுத்துக் கொண்டிருக்கிறது. தமிழகம் முழுவதும் சுற்றிச் சுற்றி பிரசாரம் செய்து வந்த விஜயகாந்த், ஆறு நாட்கள் தனக்கான தொகுதியில் பிரசாரம் செய்கிறார். சின்ன வடவாடி, எருமனூர், கோனாங்குப்பம், எடச்சித்தூர், காட்டுப்புதூர், மங்கலம்பேட்டை ஆகிய இடங்களில் விஜயகாந்த் பிரசாரம் செய்த போது, அவர் சென்ற இடங்களில் எல்லாம் அமோக மக்கள் எழுச்சி என்றுதான் சொல்ல வேண்டும். குறிப்பாக தாழ்த்தப்பட்டோர் வசிக்கும் காலனிப் பகுதிகளில் 99 சதம் விஜயகாந்த் ஆதரவாளர்களாக மாறிவிட்டார்களோ என்று எண்ணுமளவுக்குப் பெரும் கூட்டம். திராவிடக் கட்சிகளைப் போலவே விஜயகாந்தும் 'வீட்டுக்கு ஒரு சீமைப்பசு கொடுப்பேன்; உதவித் தொகை கொடுப்பேன்' என்று இலவச திட்டங்களைப் பேசி வாக்கு கேட்கிறார். "மீடியா எல்லாம் ஆளும் கட்சிக்கு ஆதரவாகவும், எதிர்கட்சிக்கு ஆதரவாகவும் பிரிஞ்சு கிடக்கறாங்க. என் தரப்பு செய்தியைப் போடுவதில்லை" என்று நம்மிடம் சொன்னார் விஜயகாந்த். காலனிப் பகுதி மக்கள் ஆர்வத்தோடு விஜயகாந்தைப் பார்க்க வருகிறார்கள்.

அ.தி.மு.க. மற்றும் பா.ம.க. வேட்பாளர்கள் இருவரும் படையாச்சிகளாக இருப்பதால், விஜயகாந்தை வீழ்த்துவதற்கு இறுதி நேரத்தில் ஜெயிக்கும் வாய்ப்புள்ள படையாச்சிக்கு அந்த இனத்து மக்கள் ஒன்றாக வாக்களிக்க வேண்டும். அது பெரும்பாலும் பா.ம.க. வேட்பாளருக்குச் சாதகமாகவே இருக்கும் என்கிறார்கள்.

• ஏ.கே.மூர்த்தி



• சோமசுந்தரம்



• எஸ்.ஆறுமுகம்



- ப்ரியன்

படங்கள் : ராஜன்

நீங்கள் கேட்டவை -தராசு

● இரா.கல்யாணசுந்தரம், மதுரை - 9 ★

? மும்பையிலுள்ள அரசு மருத்துவமனையில் பணிபுரியும் 57 டாக்டர்களுக்கு வாந்தி - பேதியால் அதே மருத்துவமனையில் சிகிச்சை அளிக்கப்பட்டிருக்கிறதே?

! அந்த மருத்துவமனையின் மேல்நிலை தண்ணீர்த் தொட்டிகள் சுத்தம் செய்யப்படாததால் வந்த நோய்த் தொற்று என்கிறார்கள். இதைக் கவனிக்காததோடு பாதுகாப்பான தண்ணீர் அருந்த வேண்டும் என்றுகூடத் தெரியாதவர்கள் டாக்டர்களாக இருக்கவே தகுதியற்றவர்கள்.

● சி.பரத், சென்னை

? மயிலாப்பூர் தொகுதி அ.தி.மு.க. வேட்பாளர் எஸ்.வி. சேகர், சிறுவர்களிடம் ஜோக் சொல்லி பெரியவர்களிடம் வோட்டுக் கேட்கிறாராமே?

! மயிலைத் தொகுதியில் அவர் தேர்தலில் நிற்பதே ஜோக். அவருக்கு எதிராக கலைஞர் நெப்போலியனை நிறுத்தியிருப்பது அதைவிடப் பெரிய ஜோக். சிரிப்புத்தான் வரவில்லை.

● போத்தனூர் புலிச் சோழன், கோவை - 23

? பூதக் கண்ணாடியில் பார்த்தும் ஜெ. ஆட்சியில் குறை ஒன்றும் இல்லையாமே... திருமாவளவன் சொல்கிறாரே?

! கைப்புண்ணுக்கு பூதக்கண்ணாடி தேவையில்லை; பார்க்கிற கண்களில் பூ விழுந்திருந்தாலொழிய!



● ஜி.மாரியப்பன், சின்னமனூர்

? மணிரத்னம் இயக்கும் படங்களில் மட்டும் எந்த நடிகரும், நடிப்பதற்கு மறுப்பதில்லையே?

! கதை அம்சத்துக்கும் பாத்திரப் படைப்புக்கும் உயர் நோக்குக்கும் ஒருங்கே முக்கியத்துவம் தரும் ஒரு சிலருள் ஒருவர் என்பதால்... ? நடிப்பை நேசிக்கும் யாருமே இப்படிப்பட்ட முழுமையான வாய்ப்புக்கு ஏங்கத்தான் செய்வார்கள்.

● ஆர்.ராஜதுரை, சீர்காழி

? மத்திய மனிதவள அமைச்சர் அர்ஜுன்சிங் வீட்டு முன் நின்று, இட ஒதுக்கீடை எதிர்த்து

# சோனியா தமிழகம் வந்தது தியாகமா?



● ஜோக்...



● ... பெரிய ஜோக்!



● முழுமையைத் தேடி...

***மாணவர்கள் மறியல் செய்தது பற்றி...?***

! மருத்துவம், இன்ஜினீயரிங் போன்ற பல முக்கிய துறைகளில் உயர் கல்விக்கு இட ஒதுக்கீடு அளிப்பதால் தேசமே பிற்படுத்தப்படும்; ஆபத்தான பல விளைவுகளும் ஏற்படும். பிற்படுத்தப்பட்டோருக்குச் சிறப்புக் கல்வி (ஸ்பெஷல் கோச்சிங்) தந்து அவர்களைத் தகுதியுள்ளவர்களாக்குவதுதான் வழி; இடஒதுக்கீடு அல்ல. மாணவர்களின் போராட்டத்தில் நியாயம் இருக்கிறது.

**●இல.வெங்கட்ராமன், கும்பகோணம்**

***? டான்ஸி வழக்கில் ஆஜரான வழக்கறிஞர்கள் நீதிமன்றம் மூலம் உத்தரவு பெற்று பத்தொன்பது லட்சம் கட்டணத்தைப் பெற்றுள்ளது பற்றி?***

! அவர்களாவது சட்டப்படி போராடி உரியதைப் பெற்றுவிட்டார்கள். தமிழக அரசுக்குத் திரும்பத் தரப்படவேண்டிய டான்ஸி நிலம் இன்னும் தரப்படவில்லை. அதற்கு யார் போராடுவது?

**●என்.சண்முகம், திருவண்ணாமலை**

***? "பொழுதுபோக்க டீ.வி. இல்லாததால்தான் ஏழைகள் அதிகமாகக் குழந்தைகள் பெற்றுக் கொள்கின்றனர். மக்கள் தொகையைக் குறைக்கவே இலவச கலர் டீ.வி." என்று தி.க. தலைவர் கி.வீரமணி பேசியிருப்பது...?***

! ஹய்யோ பாவம்! வீரமணி வீட்டில் டீ.வி. இல்லையா? இன்றைய டீ.வி. நிகழ்ச்சிகள் கு.க.வை அடியோடு மறக்கடித்து, குழந்தைகள் பெற்றுக் கொள்வதை அதிகரிக்கவே செய்யும்!

**●கே.வி.ராமன், சேலையூர்**

***? 'சங்கீத வித்யா நிதி' என்ற பட்டம் டி.கே. பட்டம்மாளுக்கு வழங்கப்பட்டுள்ளது குறித்து?***

! எண்பது வயதைக் கடந்த பிறகும், மேடைக் கச்சேரிகளிலிருந்து ஓய்வு பெற்ற பிறகும், உடல் சிரமங்களை ஒதுக்கி வைத்துவிட்டு சிஷ்யர்களுக்குத் தொடர்ந்து வகுப்புகள் எடுத்துவரும் வைராக்கிய நிதிக்கு வழங்கப்பட தகுந்த நிதி.

**●திமிங்கிலம், கோபி**

***? பிரமோத் மஹாஜன் தனது தம்பியால் சுடப்பட்ட சம்பவம் குறித்து...?***

! 'தாயும் பிள்ளையும் ஆனாலும், வாயும் வயிறும் வேறடா' என்பது பழமொழி. பணம் / பதவிக்காக அண்ணன் தம்பிகள் அடித்துக் கொள்ளும் துயரமான செய்திகள் தினமும் தொலைக்காட்சி செய்திகளில் வருகின்றன. இதில் பிரபலங்கள் விதிவிலக்கல்ல. ஆனாலும் ஆத்திரக்காரனுக்கு புத்தி மட்டாகி கொலை முயற்சியில் இறங்கியதால் முதல் பக்கத் தலைப்புச் செய்தி.

**●ஏ.சுகுமார், காட்பாடி**

***? பினாட்டினம் நகையை அதிகம் பயன்படுத்தினால் தங்கம் விலை கட்டுப்படுமா?***

! ரொட்டி கிடைக்காவிட்டால் கேக் சாப்பிடச் சொன்ன கதையாய் இருக்கிறது நீங்கள் சொல்வது.

**●எம்.சம்பத், வேலாயுதம்பாளையம்**

***? "15 தொகுதிகளில் வெற்றி பெற்றால் அடுத்த முதல்வர் எங்கள் அணியிலிருந்துதான் வருவார்" என்று சு.சுவாமி கூறுகிறாரே?***

! சும்மா சுவாமி. அவர் சொல்வதெல்லாம் சும்மா, 'நானும் இருக்கிறேன்' என்று காட்டிக் கொள்ளவே!

**●ஆர்.ரங்கநாதன், சென்னை - 17**

***? காட்மாண்டுவில் ஜனநாயக ஆட்சி...?***

❒ ரூ.100 பரிசு பெறுபவர் :
**ஆர்.நாகராஜன்,**
பிளாட் 111,
சுபம் நகர் மூன்றாவது ஃபேஸ்,
பழைய பல்லாவரம்,
சென்னை - 600 117.

★ ரூ.50 பரிசு பெறுபவர் :
**இரா.கல்யாணசுந்தரம்,**
7, நடுத்தெரு, அனுப்பானடி,
மதுரை - 625 009

! அரசியல் நிர்ணய சபை அமைக்கும் அளவுக்குத் தட்டுத்தடுமாறி முன்னேறியிருக்கிறது. அந்தப் புதுக் குழந்தை, மாவோ தீவிரவாதிகள் என்ற பிள்ளை பிடிக்கும் கும்பலிடமிருந்து தப்பி, வளர்ந்து, முதிர்ச்சி அடைந்து... நீண்ட நெடும் சாகசப் பயணம், மலை ஏறி உச்சியை அடையும் முன் காத்திருக்கிறது!

**● ஆர்.நாகராஜன், சென்னை-117**

***? தலைவர்களின் பிரசாரங்களுக்கிடையே சிலர் கேள்வி கேட்பது சரிதானா?***

! மிக நல்ல போக்கு இது. பொது வாழ்வில் இருப்போரைப் பொது மக்கள் தட்டிக் கேட்க ஆரம்பிக்கும்போதுதான் ஜனநாயகம் விழிப்புற்று எழுகிறது. ஒருவர் கேள்வி கேட்கிறபோது ஒரு லட்சம் பேருக்குப் பதில் கிடைக்கிறது; அல்லது திருப்தியான பதில் கிடைக்காமல் போகிறது. எல்லோரும் சேர்ந்து சிந்திக்க ஆரம்பிப்பார்கள்.

**● பி. பொன் இலக்கியா, மதுரை - 16**

***? தமிழகத்துக்கு சோனியா வந்ததே ஒரு தியாகம்தான் என்று கலைஞர் கூறுவது சரியா?***

! சொந்தத் தொகுதியில் அவரே தேர்தலைச் சந்தித்துக் கொண்டிருக்கும்போது, தமிழக தேர்தலுக்கு நேரம் ஒதுக்கியது பற்றி குறிப்பிட்டிருக்கிறார். சரிதான்.

**● எல்.ஆர்.ராஜாமணி, பெங்களூர்-75**

***? 'வேணும்னு செய்யல... என்னையும் அறியாம நடந்து போச்சு'ன்றாரே காவ்யா விஸ்வநாதன் - இது நியாயமா?***

! நியாயமாவது...? இந்தியாவுக்கே இந்த காவ்யா ஓர் அவமானம்.

**● சிக்ஸ்முகம், ஈரோடு**

***? டாட்டா நிறுவனத்தை மிரட்டியதாகச் சொல்லப்படும் தயாநிதி மாறனின் பதவிக்குப் பிரதமர் 'டாட்டா' காட்டிவிடுவார் என்று எதிர்பார்க்கலாமா?***

! ஆட்சியில் பிரதமர் மௌனம் சாதிக்கிறார். கருணாநிதி, 'அவர் குற்றவாளி என்று நிரூபணமானால் கட்சியில் தண்டனை பெறுவார்' என்கிறார். நீதிமன்றத்தில் வழக்கு நடந்து முடிவதற்குள் அடுத்த நாடாளுமன்ற தேர்தலே வந்துவிடும். விஷயம் ரொம்ப சிம்பிள்... ரட்டன் டாட்டா 'தயாநிதி என்னை மிரட்டியதே இல்லை' என்று நாலு வார்த்தை பேசினாலே போதும். சொல்லலியே!

**● எம்.பாஸ்கர், திண்டுக்கல்**

***? 'மத்திய அரசுடன் இணக்கமாகச் செயல்படும் ஆட்சி தமிழகத்தில் அமைய வேண்டும்' என்று சோனியா காந்தி கூறியுள்ளது பற்றி...?***

! சிதம்பரமும் இதையே கூறியிருக்கிறார். உரிமைக்குக் குரல் கொடுப்பதை மறவாமல் உறவுக்கும் கை கொடுப்பதே நல்லது.

**● தர்மன் பெரியசாமி, சென்னை-19**

***? பலமுமில்லை, பலவீனமுமில்லை; மதியீனம் என்று பதில் சொன்னீரே... சரத்குமார் - ராதிகா தி.மு.க.வில் சேர்ந்தது குறித்து உங்கள் பதில் என்ன?***

! சொந்த லாப - நஷ்டங்களை உத்தேசித்துக் கட்சி மாறுவது மோசமான போக்கு. இது சரத்குமார் - ராதிகாவுக்கு மட்டுமல்ல, ஆயாராம் - கயாராம்கள் அனைவருக்கும் பொருந்தும். கட்சியின் கொள்கைகளை ஆராய்ந்து, தலைமையின் தகுதிகளை எடைபோட்டு, நம்பிக்கையுடன் ஒரு கட்சியில் சேர வேண்டும். பிறகு அதில் நிலைத்து நின்று சுயநலமின்றி உழைக்க வேண்டும். இல்லையா, எந்தக் கட்சியிலும் சேராமல் நம் வேலையைப் பார்த்துக் கொண்டு போகவேண்டும்.

* கு.க. கொள்கை!



* வைராக்கிய நிதி!



* அநியாய தலைகுனிவு!



# 'ரோஜா'வின் கோபம்!

**குறள் வீடு Vs அடுக்குமாடி**

கும்பகோணத்தை தி.மு.கவின் கோட்டையாக மாற்றிய முன்னாள் அமைச்சர் கோ.சி.மணிதான் இந்தமுறையும் தி.மு.க வேட்பாளர். தி.மு.க ஆட்சியின்போது அவர் கொண்டு வந்த கொள்ளிடம் கூட்டுக் குடிநீர்த் திட்டம், அறிஞர் அண்ணா காய்கனி மொத்த அங்காடி, ஆதிதிராவிடர் குடியிருப்புகளுக்கு கான்கிரீட் சாலைகள், கும்பகோணம் நகரில் பாதாள சாக்கடை, மகாமகக் குளம் சீரமைப்பு என்று முன்பு ஓடிஓடி அவர் செய்த பணிகளை வாக்காளர்கள் மறக்காமல் நினைவில் வைத்திருக்கிறார்கள்.

நெசவாளர், வன்னியர், முஸ்லிம், தலித் என பலதரப்பட்ட மக்கள் வசிக்கும் கோவில்கள் நிறைந்த இத்தொகுதியில் பிராமணர்களின் வாக்கு மட்டுமே பதினைந்தாயிரம். காஞ்சி சங்கராச்சாரியார் மீது அ.தி.மு.க அரசின் நடவடிக்கை காரணமாக பி.ஜே.பியுடன் பிராமணர் சங்கம் கூட்டு சேர்ந்துவிட்ட நிலையில், "அ.தி.மு.க சார்பில் மீண்டும் போட்டியிடும் ராமநாதனுக்கு ஒரு பிராமணர் வோட்டு கூடக் கிடைக்காது" என்கிறார் குடந்தையில் விசைத்தறி வைத்திருக்கும் பிராமணரான கண்ணன்.

கும்பகோணம் தொகுதிக்குட்பட்ட எல்லாக் கிராமங்களிலும் சுய உதவிக் குழுக்கள் சுறுசுறுப்பாகச் செயல்படுகின்றன. ஆனால் இரட்டை இலைக்கு வோட்டுக் கிடையாது என்று அடித்துச் சொல்கிறார்கள் சுய உதவிக் குழு பெண்கள். அட! ஆச்சர்யமாக இருக்கிறதே என்று குடந்தையையொட்டிய கொற்கை கிராமத்தில் 'ரோஜா' சுய உதவிக் குழுவின் செயலாளர் துர்காவிடம் துருவினால் அதிரடியாகப் பதில் வருகிறது. "அரசாங்கம் எங்களுக்கு சுழற்சி நிதின்னு இருபத்தஞ்சாயிரம் கொடுத்துட்டு அதோட விட்டுட்டாங்க. நாங்களோ சுயதொழில் செய்ய பயிற்சியெல்லாம் எடுத்துட்டு மூணு லட்சம் கடன் தருவாங்க; பட்டு வளர்க்கலாம்ன்னு கனவு கண்டோம்... அந்தக் கனவே பட்டுப் போச்சு... இப்படியிருக்கும்போது எங்க வோட்டு யாருக்குன்னு நீங்களே முடிவு பண்ணிக்கோங்க"என்கிறார்.

இந்தமுறை தொகுதியில் தெம்பாக வலம் வரும் ராமநாதன் "அம்மாவின் ஆட்சி தொடர்ந்தால் குடந்தைக்கு மேலும் ஒரு புறவழிச்சாலை, புறம்போக்கு மற்றும் கழிவுநீர்க் கால்வாய் ஓரம் வீடு கட்டி வசிக்கும் ஏழைகளுக்கு அடுக்குமாடி குடியிருப்புகள் கட்டித்தருவேன்" என ஆசை காட்டிக் கொண்டிருக்க...








'ரோஜா' சுய உதவிக் குழு







• ஐ. பெரியசாமி • கோ.சி. மணி • வைத்தியலிங்கம் • ஓ.எஸ்.மணியன் • சி. சீனிவாசன்

கோசி.மணியோ, கும்பகோணம் புற நகரான மூப்பாக்கோவில் என்ற இடத்தில், இதே மக்களுக்கு ஆயிரத்து முன்னூற்று முப்பது 'திருக்குறள்' வீடுகள் கட்டித்தர கடந்த ஆட்சியிலேயே இடத்தை ஒதுக்கிவைத்துவிட்டு, "தி.மு.க. மீண்டும் ஆட்சிக்கு வந்தால் குறள் வீடுகள் உறுதி" என்று குரல் கொடுத்தபடி இருக்கிறார்.

# மத்திய மண்டலம்

## சாதனை Vs நிவாரணம்

'வேதாரண்யம் தொகுதியில் மீண்டும் களம் காணும் நடப்பு தி.மு.க. எம்.எல்.ஏ வேதரத்தினத்தை 'சாதனைச் செம்மல்' என்றே அழைக்கிறார்கள். கொள்ளிடம் கூட்டுக் குடிநீர் திட்டத்தை தலைஞாயிறு, வேதாரண்யம் வரை நீட்டிப்புச் செய்தது, சாலை வசதிகளை மேம்படுத்தியது, செம்போடை - புஷ்பவனம் கிராமங்களை இணைக்க இணைப்புப் பாலம் கட்டியது என தொகுதி முழுவதும் தமது சாதனைச் சுவடுகளைப் பதித்திருக்கிறார்.

இவரை எதிர்த்து அ.தி.மு.க. கொள்கைப்பரப்பு செயலாளர் ஓ.எஸ்.மணியன் போட்டியிடுவதால் வி.ஐ.பி தொகுதியாகி விட்டது வேதாரண்யம். கட்டப்பஞ்சாயத்து செய்பவர், சக கட்சிக்காரர்களின்மீது போலீஸை ஏவிவிடுபவர், அரசு மற்றும் தொண்டு நிறுவனங்களிடமிருந்து வந்த நிவாரணப் பொருட்களை முடக்கி வைத்திருப்பவர் என்று இவரைப் பற்றி பல்வேறு குற்றச்சாட்டுகள் நடமாடுகின்றன. ஆனால் சுனாமி நிவாரணநிதி, உழவர் பாதுகாப்புத் திட்டம் ஆகிய இரண்டு வழிகளில் ஒரு ரேஷன் கார்டு விடாமல் தொகுதியில் அனைவருக்கும் நிவாரணத் தொகையை விநியோகித்திருப்பதால் இவரை 'நிவாரணச் செம்மல்' என்று கொண்டாடுகிறார்கள் ரத்தத்தின் ரத்தங்கள். அ.தி.மு.க. சினிமா நட்சத்திரங்களை அடுத்தடுத்து கொண்டு வந்து களத்தில் இறக்கி பிரசாரத்தை அனல் பறக்கச் செய்கிறார் மணியன். ஆனால், தி.மு.க. வேட்பாளரான வேதரத்தினம் வன்னியர் சமுதாயத்தைச் சேர்ந்தவர் என்பதில் அதிக கலவரத்தோடு இருக்கிறார் மணியன்.

"தொகுதியின் வெற்றி வாய்ப்பை நிர்ணயிக்கும் அறுபதாயிரம் வன்னியர் வாக்குகள், எங்கள் வேட்பாளருக்குச் சுலபமாக வெற்றியை ஈட்டித்தரும். அதுமட்டுமில்லாமல் கம்யூனிஸ்ட் இயக்கங்கள் வலுவாக இருக்கும் தொகுதி என்பதால் அந்த இயக்கங்களில் பெரும்




• ஒரு வீடு இரு கொடிகள்...



• கேட்டதுக்குத்தான் வோட்டு...



• சல்மா, ஸ்டாலின் பிரசாரம்...

பான்மையாக அங்கம் வகிக்கும் எங்களைப் போன்ற தலித் மக்களின் வாக்குகள் வேதரத்தினத்துக்கு உறுதி'' என்கிறார்கள் பிருஞ்சிமுளை கிராமத்திலிருந்து தலைஞாயிறு பகுதிக்கு மராமத்து வேலை செய்ய வந்திருந்த மணிவாசகமும் அவரது நண்பர்களும்.

## ஒரு வீடு இரண்டு கொடி!

அ.இ.அ.தி.மு.க அரசின் - வனம் மற்றும் சுற்றுச்சூழல் துறை அமைச்சரான வைத்தியலிங்கமும், தி.மு.க. சார்பில் போட்டியிட்டு கடந்தமுறை குறைந்த வாக்குகள் வித்தியாசத்தில் தோற்ற ராஜமாணிக்கமும் ஒரத்தநாடு தொகுதியில் மீண்டும் மோதுகிறார்கள். தொகுதியின் மொத்த சாலைகளையும் பளபளக்க வைத்திருக்கிறார் அமைச்சர். தொகுதியில் உள்ள பத்தாயிரம் ம.தி.மு.க. வாக்குகள் இவருக்கு இந்த முறை புதிதாகக் கை கொடுத்தாலும், திராவிடர் கழகம் வலுவாக இருக்கும் இந்தத் தொகுதியில் சுயமரியாதைக்காரர்களின் வாக்கு முழுவதும் இந்தமுறை தி.மு.கவுக்கே திசை திரும்புகிறது. இதனால் அரண்டு போன அமைச்சர், கிராமம் கிராமமாகச் சென்று வோட்டுக் கேட்கிறார்.

ஒரத்தநாடு தொகுதியை வலம் வந்த போது காஞ்சிகுடிகாடு கிராமத்தில் ஒரே வீட்டில் தி.மு.க., அ.தி.மு.க. ஆகிய இரண்டு கொடிகளும் ஜோராகப் பறக்க, உள்ளே நுழைந்து விசாரித்தோம். குடும்பத்தலைவர் காசிநாதன் இருபத்து மூன்று வருடங்களாக அ.தி.மு.க. உறுப்பினர். ஆனால் அவரது இருபத்து மூன்று வயது மகன் அண்ணாதுரை, மு.க. ஸ்டாலினின் தீவிர விசிறி. பா.ம.க வலுவாக இல்லாத தொகுதி இது. இதனால் தி.மு.க. - அ.தி.மு.க ஆகிய இரண்டு தரப்பு வேட்பாளர்களுக்கும் இடையில் இங்கேயும் இழுபறிதான்.

## சாலைகளால் சர்ச்சை!

தொடர்ந்து நான்குமுறை சட்டமன்ற உறுப்பினராக வென்று காட்டி, இன்று வரை தஞ்சாவூரை தி.மு.கவின் கோட்டையாக நிலைநிறுத்தி வந்திருக்கிறார் உபயத்துல்லா. ஆனால் இந்தமுறை வெற்றி வாய்ப்பை அவர் கைநழுவவிட வேண்டிய நிலைக்கு தள்ளப்பட்டு விட்டார் என்கிறார்கள் தஞ்சை வாக்காளர்கள்.

''கடந்த நான்கு வருஷமா பாதாள சாக்கடை போடுறோம்ன்னு நகராட்சியே வீட்டுக்கு ஐயாயிரம் ரூபாய் வாங்கிட்டு, தரமில்லாத பைப்பு, திட்டமிடாத பணின்னு தஞ்சாவூரில் மொத்த சாலைகளையும் குண்டும் குழியுமாகப் போட்டு வெச்சுட்டாங்க. உபயத்துல்லாவும் நடக்குறது நம்ம ஆட்சி இல்லன்னு கண்டுக்கவே இல்ல. இதனால் நாங்க படுறபாடு கொஞ்சநஞ்சமில்ல...'' என்று குமுறுகிறார் முதல் முறையாக வோட்டுப் போட இருக்கும் சேகர். உபயத்துல்லாவின் மகன் மீது நிறைய குற்றச்சாட்டுகளைச் சொல்கிறார்கள் தஞ்சைவாசிகள்.

உபயத்துல்லாவை எதிர்த்துப் போட்டியிடும் அ.தி.மு.க. வேட்பாளர் ரங்கசாமி, அங்குள்ள தங்கமுத்து அணி, அமைச்சர் வைத்தியலிங்கம் அணி என எதிலும் சேராமல் பணத்தைத் தண்ணீர் மாதிரி செலவு செய்து வருகிறார். இவர் நடராஜனின் உறவினர் என்கிறார்கள். என்றாலும் உபயத்துல்லாவுடன் ஒப்பிடும் போது ரங்கசாமி பலவீனமாகவே காட்சியளிக்கிறார். இதனால் மக்கள் விரும்பாத நிலையிலும் உபயத்துல்லாவே மீண்டும் வெற்றியை ருசிக்கும் நிலை.

## சாதனை நாயகி சல்மா!

துவரங்குறிச்சியையொட்டிய மருங்கா

புரி தொகுதியில் தி.மு.க.வின் நட்சத்திர வேட்பாளரைப் போல வலம் வருகிறார் கவிஞர் சல்மா. பொன்னுப்பட்டி ஊராட்சி மன்றத் தலைவியாக கடந்த பத்தாண்டுகளில் அவர் நிறைவேற்றிய பணிகளைக் குறிப்பிட்டு, "இந்தக் கிராமங் களைப் போலவே மொத்த தொகுதியை யும் மாற்றிக் காட்டுவேன்" என்று தெளி வாகப் பேசுகிறார்.

மற்றொரு பக்கம் கடந்த தேர்தலில் வென்ற அ.தி.மு.க. வேட்பாளர் செல் லையா, தொகுதி பக்கமே தலைகாட்டா தது, சல்மாவுக்கு வாக்காளர் மத்தியில் மேலும் பலம் சேர்க்கிறது. மருங்காபுரியில் கொலத்து வேலை செய்யும் நாகராஜன், "செல்லையா தொகுதிப்பக்கம் வரலைங் கிறது கிடக்கட்டும். கட்டப்பஞ்சாயத்து, கட்சி ஊழியர் கூட்டத்தைக் கலவரமா மாத்துறதுன்னு அவரு போக்கு சரியில்லே. நல்ல வேளையா அவ ருக்கு மறுபடியும் சீட்டுக் கொடுக் கல..." என்கிறார்.'

தற்போது அ.தி.மு.க சார்பில் போட்டியிடும் சின்னசாமி, அம் மாவின் சாதனைகளை மட்டுமே சொல்லி வோட்டுக் கேட்கிறார். சல்மாவோ, மருங்காபுரிக்கு கலை, மற்றும் பொறியியல் கல்லூரிகள், தொழிற்சாலை என தொகுதியில் எது இல்லையோ அவற்றைச் செய்து தருவதாக வாக்குறுதிகளைத் தருகிறார். இதனால் சல்மாவின் கை மேலோங்கி இருக்கிறது.

## மத்திய மண்டலம்

### களத்தில் கலக்கும் வாரிசுகள்

திண்டுக்கல்லை அடுத்த ஆத்தூர் தொகுதியில் தி.மு.க. முன்னாள் அமைச் சர் ஐ. பெரியசாமி, அ.தி.மு.க. பொருளா ளர் திண்டுக்கல் சி.சீனிவாசன் ஆகிய இரண்டு பெரிய தலைகள் மோதுகின்றன. இவ்விருவரது மகன்களும் தீவிர தேர்தல பணியில் ஈடுபட்டுள்ளனர்.

தேவாங்கர் சமூக நெசவாளர்கள், செட்டியார், பிள்ளைமார், ஆதிதிராவிடர் என பல பிரிவினரும் கொண்ட இத் தொகுதியில் ஜாதி அடிப்படையில் வாக்குகள் சிதறியதில்லை. மாறாக தொகுதியைக் கண்ணும் கருத்துமாகப் பார்த்துக் கொள்ளும் ஆட்சி மன்றப் பிரதிநிதிகளை வாக்காளர்கள் இங்கே கைவிட்டதில்லை என்பதற்கு ஐ.பெரிய சாமியே உதாரணமாக இருக்கிறார். தொகுதியில் எந்த பகுதிக்கு என்ன தேவை என்பதை கள ஆய்வு செய்து நிறைவேற்றித் தருவதில் பெரியசாமியை அடித்துக்கொள்ள முடியாது என்று பாராட்டுப் பத்திரம் வாசிக்கிறார்கள் ஆத்தூர் பகுதி மக்கள். அதே போல் இளம் வாக்காளர்கள் மத்தியில் விஜய காந்துக்கு பலமான ஆதரவு இருக்கிறது. ஆனால் தொகுதியின் நடப்பு அ.தி.மு.க. எம்.எல்.ஏவான பி.கே.டி நடராஜன், தொகுதியைக் கண்டு கொள்ளாமல் விட்டுவிட்டதால், தற்போதைய அ.தி.மு.க. வேட்பாளர் சீனிவாசனுக்கு பெருத்த தர்மசங்கடம். மூன்று முறை எம்.பியாக இருந்த இவர், தலைமைக் கழக பொரு ளாளராகப் பொறுப்பு வகித்து வருகிறார். இதனால் சென்னையிலேயே அதிக நாட் கள் தங்கவேண்டி இருப்பதால் இவருக்கு வோட்டுப் போட்டாலும் தொகுதிப் பக்கம் வரமாட்டார் என்று கோபமாகச் சொல்கிறார்கள் மக்கள்.


• வேதரத்னம்


• ராஜமாணிக்கம்


• ராமநாதன்

விசிட், படங்கள்:
**ஆர்.சி.ஜெயந்தன்**

# நீயா...

### பாவம் பா.ம.க.!

மேட்டூர் தொகுதியில் பா.ம.கவின் சார்பில் அதன் தலைவர் ஜி.கே.மணியும் அ.தி.மு.க. சார்பில் உள்ளூர் நகராட்சி சேர்மனான கந்தசாமியும் களத்தில் நிற்கிறார்கள்.

“எதிர்கட்சி வேட்பாளர் நகராட்சி சேர்மன்தான். ஆனால் அவரைக் கொண்டு வந்து ஏதாவது ஒரு தெருவில் விட்டுவிட்டு வீட்டுக்குப் போங்கன்னா அவரால முடியாது. அந்த அளவுக்குத் தொகுதியை அறியாதவர்” எனும் சதாசிவம் பா.ம.க. உள்ளூர் தலைவர்.



• வீரபாண்டி ஆறுமுகம்

“மேட்டூர் அணையிலே தண்ணீர் வெள்ளமாக இருந்தாலும் இங்கே கொஞ்ச நேரம் தான் தண்ணீர் வரும். இந்த நிலை மாற 1996-ல் தி.மு.க. அரசு ஒரு வரைவு ஒப்பந்தம் போட்டிருந்தார்கள். ஆனால் ஜெயலலிதா ஆட்சியில் அதை நிறுத்தி வைத்தார்கள். எங்கள் கூட்டணிக்காரர் வெற்றி பெற்றதும் இதை அமலாக்குவது தான் அவர் முதல் வேலையாக இருக்கும்” என்றார் தி.மு.க. நகரச் செயலாளரான காசி விஸ்வநாதன்.

“பா.ம.க. என்றாலே அது ஒரு அராஜகக் கட்சி என்று மக்கள் மனத்திலே பதிந்துவிட்டது. ஜலகண்டபுரத்திலே அவங்க செய்த வன்முறை கொஞ்ச நஞ்சமா?” என்றார் அ.தி.மு.கவைச் சேர்ந்த மனோகர்.

ஒட்டுமொத்தமாகப் பார்க்கும்பொழுது என்னதான் ஜி.கே.மணிக்கு ஏரியாவில் செல்வாக்கிருந்தாலும், பா.ம.க. மீதிருக்கும் வெறுப்பு காரணமாக கந்தசாமியின் கையே ஓங்கியிருக்கிறது.

### வெற்றிக்கோட்டை நோக்கி...!

சேலம் - 2 தொகுதியில் தி.மு.க.வின் வீரபாண்டி ஆறுமுகமும் அ.தி.மு.க.வின் முன்னாள் சேலம் மேயர் சுரேஷ்குமாரும் போட்டியிடுகிறார்கள். இந்தத் தொகுதியின் வெற்றியை இரு அணியினரும் கௌரவப் பிரச்னையாகக் கருதுகின்றனர்.

“சுரேஷ்குமார் வீரபாண்டியருக்குச் சமமானவர் இல்லை. அவர் அண்ணன் அழகாபுரி மோகன்ராஜ்தான் சமமானவர். காங்கிரஸ் கட்சியை சேர்ந்தவரான



• பிரகாஷ்



• சதாசிவம்



• பழனியம்மாள்

அவர், சீட் கிடைக்காததினால் ஆயிரம் பேரோடு விஜயகாந்த் கட்சியில் பத்து நாளைக்கு முன்னே சேர்ந்தது சுரேஷ்குமாருக்குப் பின்னடைவுதான்'' என்றார் பெயர் சொல்ல மறுத்த ஒருவர்.

மகளிர் சுய உதவிக்குழு பயிற்சிக்கு வந்திருந்த ரோஸ்மேரி, லீலாவதி, ராஜேஸ்வரி, சுமதி, கோமதி, செல்வி ஆகியோர் தி.மு.கவுக்குத் தங்கள் ஆதரவை மிக அழுத்தமாகத் தெரிவித்தனர்.



• ஜி.கே.மணி

பெரும்பாலானவர்களின் விருப்பமாக இருக்கும் வீரபாண்டி ஆறுமுகம், வெற்றிக் கோட்டை மிக எளிதாகத் தொட்டு விடுவார் என்பதுதான் லேட்டஸ்ட் நிலவரம்.

### ராஜா, ராஜா இல்லை!

'சேலம்-2ல் அப்பா வீரபாண்டி ஆறுமுகம் போட்டியிட, சேலத்தில் மகன் ராஜாவுக்கு டிக்கெட் கொடுத்திருக்கிறது தி.மு.க. 'இதிலிருந்தே தெரியவில்லையா தி.மு.க.வின் வாரிசு அரசியல் கொடுமை' என்பதே இங்கு அ.தி.மு.க.வின் பிரசாரமாக இருக்கிறது. அ.தி.மு.க.வின் சார்பில் நிற்பவர் விஜயலட்சுமி பழனிச்சாமி.

''எப்போ முதல்வரம்மா தன்னுடைய கெடுபிடியான திட்டங்களையெல்லாம் ஒவ்வொன்றாக வாபஸ் வாங்க ஆரம்பிச்சாங்களோ அப்போதிலிருந்தே அ.தி.மு.க. வெற்றி இந்தத் தொகுதியிலே உறுதிப்பட்டுடுச்சு'' என்றார் பசுபதி. சர்வீஸ் இன்ஜினீயராக இருக்கும் ஜெயபிரகாஷ் ''எப்பவும் ஆட்சியில் மாறுதல் இருந்தால்தான் நல்லது. அப்போதுதான் நம்ம பவர் அவங்களுக்குப் புரியும். அதனாலே தி.மு.க.தான் என் சாய்ஸ்'' என்றார்.

இஸ்திரி வேலை செய்யும் முத்துசாமி ''ரௌடியிஸம் இல்லாமல் இருப்பது அம்மா ஆட்சியில்தான். இந்தப் பகுதியிலே தி.மு.க. ஜெயிச்சா அதுக்கப்புறம் எந்தத் தகராறு நடந்தாலும் பண பலமும் ஆள் பலமும் அதிகம் இருக்கிற பக்கத்துக்குத்தான் ஆதரவுன்னு ஆயிடும்'' என்றார்.

# ...நானா?

குழந்தைகளுடன் வீட்டு வாசலில் உட்கார்ந்திருந்த உமாவும் சித்ராவும் ''எங்க மனுஷங்க தி.மு.க.வுக்குத்தான் வாக்களிப்பாங்க. இந்த அம்மா ஆட்சியிலே விசைத்தறி நெய்யறவங்க நிறையப் பேர், அரசு எந்தச் சலுகையும் அளிக்காததாலே தொழிலையே கைவிடும்படி



• பசுபதி



• மனோகர்



• மணிமாறன்



• குபேர சம்பத்



• காசி விஸ்வநாதன்

ஆயிடுச்சு. இப்படி எவ்வளவு பேருடைய வாழ்க்கை இவங்க ஆட்சியிலே சிதைஞ்சுடுச்சு தெரியுமா?'' என்றனர்.

அப்பா வீர பாண்டி ஆறுமுகம் சேலம்-2ல் ஆஜானுபாகுவாக வீறு கொண்டெழ, மகன் ராஜா சேலத்தில் பின்தங்கி வருகிறார்.

## வெற்றிக் கோட்டையன்!

கோபிச்செட்டி பாளையம் வி.ஐ.பி. தொகுதி. இங்கு அ.தி.மு.க.வுக்காக செங்கோட்டையனும் தி.மு.க.வுக்காக மணி மாறனும் களம் காண்கின்றனர்.

செங்கோட்டையனின் ஒரு செயல், அவருக்குக் கணிசமான ஆதரவாளர்களை தொகுதியில் பெற்றுத் தந்திருக்கிறது. தன் தொகுதிக்காரர்களின் வீடுகளில் 'பெரிய காரியம்' (இறுதிச் சடங்கு) விழுந்துவிட்டால், கட்சி வித்தியாசம் பார்க்காமல் அங்கு கட்டாயம் செல்வதும், முடிந்த உதவிகளைச் செய்வதும் தான் அந்தச் செயல். ''என்னோட ரெண்டு பாட்டி, ஒரு மாமாவோட துக்கத்துக்குக் கூட வந்திருந்தார்'' என்று உருகினார் ஆட்டோ ஓட்டுநர் பிரகாஷ். இதே கருத்தை வலியுறுத்தினார் குபேர சம்பத்.

''சாலை வசதி, குடிநீர், கிராமத்தில் எழும் சிறு பிரச்னைகள் ஆகியவைதான் ஜெயித்தவுடன் நான் முதலில் கவனம் செலுத்தும் விஷயங்களாக இருக்கும்'' என்றார் தி.மு.க. வேட்பாளர் மணிமாறன் நம்மிடம்.

போட்டி பலமாக இருந்தாலும் செங்கோட்டையனின் வெற்றி உறுதிப்படுத்தப் பட்டு விட்டதாகவே தொகுதிக்குள் பேசிக் கொள்கிறார்கள்.



• செங்கோட்டையன்

## இழுபறி ஈரோடு!

ஈரோடு தொகுதியில் அ.தி.மு.கவின் சிவகுமார் மற்றும் தி.மு.கவின் ராஜாவுக்கு இடையேதான் பலமான போட்டி. மேடைப் பேச்சு, டோர் கேன்வாஸிங், துண்டுப் பிரசுரங்கள் என்று இரு தரப்பிலும் களைகட்டியிருக்கிறது தேர்தல்.

''சிவகுமாருக்கு ஊரகப் பகுதிகளில் செல்வாக்கு அதிகம். ராஜாவுக்கு நகரப் பகுதியிலே வாக்கு வங்கி உண்டு. கிராமத்தைவிட நகர வோட்டுகள்தானே அதிகம். அதனாலே முன்னாள் அமைச்சர் பெரியசாமியின் மகனுக்குத்தான் வெற்றிவாய்ப்பு அதிகம்'' என்றார் வெற்றிலைப் பாக்குக் கடை வைத்திருக்கும் மாரிமுத்து.

''யூனியன் சேர்மனாக இருமுறை நல்லபாளையத்தில் இருந்தவர் சிவகுமார். ஆனால் ராஜா கவுந்தப்பாடிக்காரர். ஜனங்க உள்ளூர்க்காரர்களை ஏத்துக்கு வாங்களா, அசலூரையா?'' என்றார் சிறிய அளவில் துணி வியாபாரம் நடத்தும் ஜெயராமன்.

''எங்களுக்கெல்லாம் ஒரே கணக்குதான். இரட்டை இலைக்கு முத்திரை போடுவது. அம்மா எப்பவும் நல்லதுதான் செய்வாங்க'' என்று ஒரே குரலில் கூறினார்கள் மூட்டை தூக்கும் தொழிலாளர்கள்.

''சத்தியமாச் சொல்றேன் இங்க வந்து

பேசுகிறவர்களை நினைத்துப் பார்த்தால் நிச்சயம் தி.மு.க.தான் ஆட்சிக்கு வரும்.''- இது நியூஸ் பேப்பர் கடை வைத்திருக்கும் மூர்த்தி.

கருத்துகள் மக்களிடமிருந்து பலவாறாக வந்தாலும் இறுதித் தீர்ப்பு என்னவாக இருக்குமென்பது எளிதில் நிர்மானிக்கக்கூடிய விஷயமாக ஈரோட்டில் இல்லை. ராஜா, சிவகுமார் இருவரில் யார் வெற்றி பெற்றாலும் அது சாதாரண வெற்றியில்லை என்பது மட்டும் உறுதி.



• உமா, சித்ரா...

### பளிச் பளிச்!

திருச்செங்கோட்டில் அ.தி.மு.க. சார்பில் தங்கமணி போட்டியிட, தி.மு.க.வுக்காக காந்தி செல்வம். இருவருமே சுறுசுறுப்பாக தேர்தல் பணியாற்றுகிறார்கள்.

''வழக்கமாக ரெட்டை இலைக்குத்தான் போடுவேன். ஆனால் விலைவாசி குறையலியே. தவிர கலைஞருக்குப் போட்டால் சவுகரியமாச்சுங்களே'' என்றார் ஏரியாவில் வெள்ளரிக்கடை வைத்துள்ள பழனியம்மா. 'அதென்ன சவுகரியம்? கலர் டீ.வி.யா?' என்றால் ''ஆமாம்'' என்று வருகிறது கூச்சமான பதில்.

''இந்தப் பகுதியிலே புதிய வேலை வாய்ப்பே இல்லீங்க. படித்த இளைஞர்கள் எல்லாம் வெறுத்துப் போயிட்டாங்க. அரசுப் பணிக்கு நுழைவுத் தேர்வு வரும் என்று நம்பி ஏமாந்திருக்காங்க. இதெல்லாம் தேர்தலில் வெளிப்படும்'' என்றார் மார்க்கெட் பகுதிக்கு வந்திருந்த பார்த்த சாரதி.

ஆலய வளாகத்தில் அமர்ந்திருந்த சண்முகம் ''பொன்னையனை இங்கு மறுபடியும் நிறுத்தியிருந்தால் கோவிந்தா ஆகியிருக்கும். உள்ளூர்க்காரர்களை அவர் மதித்ததில்லை. நல்லவேளையாக பள்ளிப்பாளையத்தில் ஒன்றிய சேர்மனாக இருந்த தங்கமணிக்கு அ.தி.மு.க. வாய்ப்புக் கொடுத்தாங்க. நல்ல சாய்ஸ்'' என்றார்.

தொகுதி முழுக்க வலம் வந்ததில் ஒரு விஷயம் பளிச்செனத் தெரிந்தது. அது, காந்தி செல்வம் முன்னணியில் நிற்பது.

**- ஆதர்ஷ்**

படங்கள் : ஸ்ரீஹரி

• முத்துசாமி



• மாரிமுத்து





• மூட்டை தூக்கும் தொழிலாளர்கள்...



# “செல்வியில் நடித்தது மிகப்பெரிய தவறு!”

‘மெட்டி ஒலி’ போஸ் இப்போது சின்னத்திரையைவிட்டு வெள்ளித்திரையில் தோன்ற ஆரம்பித்திருக்கிறார். ஏன், என்ன ஆச்சு?

“இனி சினிமாதான் வாழ்க்கைன்னு முடிவு பண்ணிட்டேன். ஏன்னா சீரியல்ல நடிச்சுட்டே சினிமாவுக்குப் போனா, கிடைக்குற சம்பளம் என்னை விடத் திறமை மற்றும் புகழ் இரண்டிலேயும் குறைவா இருக்குற நடிகரை விடவும் கால்வாசிதான் கிடைக்குது. மரியாதை அதைவிட மோசம். அதோடு ‘சீரியல்ல நடிச்சு தினமும் டி.வியில வந்தா மக்கள் உங்களைப் பார்க்க எதுக்காக தியேட்டருக்கு வரணும்’னு கேக்குறாங்க. அதான் இப்போ டி.வி ஷூட்டிங் போறதையே நிறுத்திட்டேன். சுந்தர் சி. கதாநாயகனா நடிக்கிற ‘தலைநகரம்’, ‘உயிர்’, ‘சதுரங்கம்’ இந்த மூன்று படங்கள்லேயும் நமக்குப் பிரமாதமான கேரக்டர்கள். அடுத்து கதாநாயகனாகவும் வில்லனாகவும் மிரட்டவும் தயாரா யிட்டேன். கூடவே மலையாளப் படங்களிலேயும் நம்ம திறமையை மதிச்சு பல வாய்ப்புகள் வந்திட்டிருக்கு” என்கிறார்.

‘மெட்டி ஒலி’க்குப் பிறகு தேக்கம் வந்தது ஏன் என்றால் ‘செல்வி’யை நோக்கிக் கைகாட்டுகிறார். “செல்வியில் நடிக்க ஒப்புக்கிட்டது நான் செஞ்ச பெரிய தவறு. ‘மெட்டி ஒலி’யில் நான் ஹீரோ மாதிரி. ஆனா ‘செல்வி’யில் ராதிகா மேடமுக்கு அடுத்த நிலையில் தான் எல்லா கேரக்டர்களும் இயங்குது. இதனால் நம்ம நிலைமை ஒருபடி கீழே இறங்கிடுச்சு. இப்படியே போனா இன்டஸ்ட்ரியை விட்டே காணாமப் போயிடுவோம்னுதான் சுதாரிச்சுட்டேன்” என்கிற போஸுக்கு இன்னொரு பெரிய வருத்தம், திருமுருகனின் முதல் திரைப்படமான ‘எம்டன்மக’னில் தனக்கு எந்த வேடமுமில்லாதது.

“ஆட்டோ டிரைவரா இருந்த என் வாழ்க்கையை யூ டர்ன் அடிச்சுத் திருப்பினவரு திருமுருகன். கட்டாயம் அவர் படத்துல நமக்கு ஒரு வேஷமிருக்குன்னு மனப்பூர்வமா நம்பினேன். ஒரு வழிப்போக்கனா நடிக்கச் சொல்லியிருந்தாலும் ஆத்மார்த்தமா ஒப்புக்கிட்டிருந்திருப்பேன்” என்கிறார் வேதனையோடு.

• சநகன்



• வெங்கட்

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / CC (S) DN / 144 / 06 - 08 * Licensed to post without prepayment under PMG's Licence No. WPP TN / CC (S) DN / 70 / 06 - 08* Registered as a Newspaper in Srilanka.